Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 317

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1974ஆு கார்த்திகை மாத வெளியீடு

# ஸ்ரீ ராமாநுஜன் சந்தா வரவுகள்

சென்றவிதழ்களின் தொடர்ச்சி.

ஸ்ரீமான்கள்
G. ராஜாமணி, கடலூர்
ஜீவியச் சந்தா ரூ. 100
M. K. ராமசாமி, New Delhi
T. S. A. K. Sabha, Madras-44
S. Venkatakumar, Advocate, Madras-11
R. அனந்தாசாரியார்; அம்பலமேடு
T. முனுசாமி ரெட்டியார் அச்சிறுபாக்கம்
R. சௌரிராஜன், ஸ்ரீரங்கம்
P. S. திருவேங்கடாசாரியார், புது தில்லி
K. கோபாலன் B.A., B.L., Hyderabad
ரங்கம் ஜானகி, ஆழ்வார் திருநகரி
P. ராமஸ்வாமி, திருச்சி
K. வெங்கடராமாநுஜம், திண்டுக்கல்
ஸ்ரீமதி L. பர்வதம்மாள், உடுமலைப் பேட்டை

ஸ்ரீமான்கள்
M. S. வெங்கடாசாரியார் சென்னை-5
A. ரங்கநாத ஐயங்கார் மதுரை
G. வெங்கடாசலம் செட்டியார் ஈரோடு
M. R. சேஷாத்ரி ஐயங்கார் சென்னை-1
Dr. S. வேணுகோபாலன் சென்னை-4
K. V. திருமலாசாரியார் சென்னை-33
சாமு ஐயங்கார் சேத்தூர்
A. ரங்கமன்னார் புது தில்லி-23
K. M. ரங்கசாமி ஐயங்கார், ஸ்ரீபெரும்பூதூர்
K. ஜகன்னாதாசாரியார் திருச்சி-16
Rao Sahib S. ராகவ ஐயங்கார், சென்னை-17
K. A. பார்த்தஸாரதி, சென்னை-44

---

# திருப்பாவை உபந்யாஸங்கள்

(திருச்சியிலும் - புதுவையிலும்)

ஸ்ரீமான் K. P. S. சுந்தரராஜன் செட்டியாரைத் தலைவராகவும், ஸேவாரத்னம் ஸ்ரீ M. R. சண்ணபிரான் நாயுடுவைக் காரியதரிசியாகவும் பெற்ற திருச்சி திருக்கச்சிநம்பி ஸபையின் சார்பில் 19-வது ஆண்டு திருப்பாவை உபந்யாஸம் (திருமதி அம்மாக்கண்ணு அம்மையார் திருமண மாளிகை, சின்ன செட்டித் தெரு, திருச்சி-8). ஸ்ரீரங்கம் வித்வான் ஸ்ரீ உ. வே. S. பார்த்தஸாரதி ஐயங்கார் M. A. அவர்களால் 16—12—74 முதல் 14—1—75வரை மாலை 7-30 முதல் 8-30 வரை சிறப்புடன் நடைபெறும்.

ஸ்ரீமான் உ. வே. W. S. ராமாநுஜாசாரியரின் நன்முயற்சியால் புதுவையில் ஸ்ரீ வரதராஜப்பெருமாள் ஸந்நிதியில் 16—12—74 முதல் (ஒருமாதம்) இரவு 7 மணியளவில் திருப்பாவை உபந்யாஸம் மயிலை வித்வான் — செந்தமிழ் வேதியர் ஸ்ரீமான் உ. வே. குமாரவாடி சே. ராமாநுஜாசாரியரால் நிகழ்த்தப்பெறும். 15—12—74 இரவு 7 மணிக்கு திரு N. சேதுராமன் (Ex. M. P. அவர்கள் திருப்பாவை அவதாரிகையைத் தொடங்கி வைப்பார்கள். 16—12—74 இரவு 7 மணிக்கு திரு B. துரைசாமிநாயுடு அவர்கள் திருப்பாவை உபந்யாஸத்தைத் துவக்கிவைப்பார்கள்.

# ஸ்ரீ ராமாநுஜன்—317



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 27 | 15—12—74 ஆனந்தஸ்ரீ கார்த்திகை மாத வெளியீடு | ஸஞ்சிகை 5


## கார்த்திகைத் திங்களநுபவம்

இந்த ஸ்ரீராமாநுஜனிதழ் கார்த்திகைமாத வெளியீடாக வெளிவருகின்றது. கார்த்திகைமாதம் என்றவுடனே ஸ்ரீ வைஷ்ணவர்களனைவர்க்கும் திருமங்கையாழ்வார் தாம் முன்னம் நினைவுக்கு வருவர். அடுத்தபடியாகத் திருப்பாணாழ்வாரையும் நினைப்போம். எண்ணிக்கையில் அதிகமான பாசுரங்களைப் பாடிய ஆழ்வார் யாவர்? எண்ணிக்கையில் மிகக் குறைந்த பாசுரங்களைப் பாடிய ஆழ்வார் யாவர்? என்று வினவினால், முதல் வினவுக்குத் திருமங்கையாழ்வாரையும், இரண்டாம் வினவுக்குத் திருப்பாணாழ்வாரையுமே விடையாகக் கூற வேண்டும். இவ்வாழ்வார்களிருவரும் ஒரே மாதத்தையே தங்கள் அவதாரத்திற்கு உரியதாகக்கொண்டதும், அடுத்து நிற்கும் நக்ஷத்திரங்களையே கொண்டதும் விசேஷித்துக் குறிக்கொள்ளத்தக்கது.

திருப்பணாழ்வாருக்கு முந்தினவரான தொண்டரடிப்பொடியாழ்வார் தமது இரண்டாவது பிரபந்தமான திருப்பள்ளி யெழுச்சியைத் தலைக்கட்டும்போது *அடியார்க்காட்படுத்தாய்* என்றார். அவர்க்கடுத்தவரான திருப்பாணாழ்வார் தமது பிரபந்தத்தைத் தொடங்கும்போது * அடியார்க்கென்னையாட்படுத்த விமலன் * என்றார். இவ்வாழ்வார் தமதுபிரபந்தத்தைத்தலைக்கட்டும்போது *என் அமுதினைக்கண்டகண்கள்* என்றார்; இவர்க்கு அடுத்தவரான திருமங்கையாழ்வார் (ஆரா) அமுது என்றே திருநாமம் கொண்ட பெருமாளை நினைத்து, தாம் பிரபந்தம் தொடங்கும்போதும் தலைக்கட்டும்போதும் *சூழ்புனற் குடந்தையேதொழுது* சூழ்புனற் குடந்தையே தொழுமின்* என்றும், * தண்குடந்தைக் கிடந்தமாலை * என்றும் அப்பெருமானுறையுங் கோயிலைக் கூறினர். இதெல்லாம் ஒரு ஸங்கேதத்தினாலாயதன்று. தெய்வ வாக்காகையாலே தெய்வவசமாகக் கூடுவதாமத்தனை. நம்மாழ்வார் இவ்

விபூதியில் நின்றும் நித்யவிபூதிக் கெழுந்தருளி *வந்தவரெதிர்கொள்ள மாமணி மண்டபத்து அந்தமில்பேரின்பத்தடியரோடிருக்கும்போதும் * குடந்தை யெங்கோவலன் * என்று திருக்குடந்தை யெம்பெருமானை நினைத்தபடியாலே இவ்வாழ்வாரும் திருக்குடந்தையையே முதலிட்டாரென்னும்படியானதும் தெய்வவசமானது.

# திருமங்கையாழ்வார் பேசிய கதைகள் 3

திருமங்கையாழ்வார் அநுஸந்தித்த கதைகளில் மற்று எந்த ஆழ்வாரும் அநுபவியாமல் இவரொருவரே அநுபவித்ததென்னலாம்படியான கதை எது? என்று கேட்டால், பெரிய திருமொழியில் (5-8.) * ஏழையேதலன் பதிகத்தில் *வாதமாமகன் மற்கடம் விலங்கு* என்கிற இரண்டாம் பாட்டிலும், *மாகமாநிலம் முழுதும் வந்திறைஞ்சும்* என்ற ஐந்தாம் பாட்டில்லும், * துளங்குநீண்முடியரசர் தங்குரிதில்* என்கிற ஒன்பதாம் பாட்டிலும் அநுஸந்தித்துள்ள கதைகள் மூன்றும் அபூர்வமானவை; இவ்வாழ்வாரொருவரே அநுஸந்தித்தவை. *ஏழையேதலன் கீழ்மகனென்னாது*என்ற முதற்பாட்டி லநுஸந்தித்த கதையும் அபூர்வமானதுதானே — என்னவேண்டா; பெரியாழ்வார் திருமொழியில் (3-10-4.) *கூரணிந்த வேல்வலவன் குகனோடுங் கங்கைதன்னில், சீரணிந்த தோழமை கொண்டது மோரடையாளம்* என்றுள்ள பாசுரம் காண்க. அதில் *சீரணிந்த தோழமை என்றதைத்தான் திருமங்கையாழ்வார் *ஏழையேதலன் பாசுரத்தினால் விவரித்தருளினர்—என்றுணர்க. மேலெடுத்த மூன்று பாசுரங்களில் அபூர்வமென்னப்பட்ட மூன்று கதைகளின் விவரணம் வருமாறு.

வாதமாமகன்மற்கடம்விலங்கு மற்றோர்சாதியென்றொழிந்திலை* உகந்து
காதலாதரம் கடலினும்பெருகச் செய்தகவினுக்கில்லைகைம்மாறென்று*
கோதில்வாய்மையினாயொடுமுடனே உண்பன்நானென்றவொண்பொருள்*எனக்கும்
ஆதல்வேண்டுமென்றடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே (2)

ராவண ஸம்ஹாரமான பின்பு விபீஷணன் முதலிய அரக்கர்களோடும் ஹநுமான் ஸுக்ரீவன் முதலிய வாநரர்களோடும் ஸீதாலக்ஷ்மணர்களுடனும் புஷ்பக விமானத்திலேறி ஸ்ரீராமபிரான் ஆகாயமார்க்கமாக அயோத்திநகர் நோக்கி மீண்டெழுந்தருளும்போது கங்காநதியும் யமுநாநதியும்சேருமிடமானபிரயாகையில் வஸிக்கின்ற பரத்வாஜ முனிவரது விருப்பத்தின்படி அவராச்ரமத்திலிறங்கி ஸேனைகளுடன் அங்கு விருந்துண்ணச் சம்மதித்து நின்றவளவிலே பரத்வாஜமுனிவர் தமது தவப்பெருமையால், அத்திரளிலுள்ளா ரெல்லார்க்கும் வேண்டியவளவு உண்கலங்களையும் உணவுகளையும்தெய்விகமாகவுருவித்து வெகுஸம்ப்ரமமாகவிருந்து செய்தனர். அங்ஙனம் ராமனும் அவனைச்சார்ந்தவரனைவரும் தம்தமக்கென்று பரிமாறியவாழையிலையில் உண்ணுகிறபொழுது, ஏற்கெனவே தவணைகடந்துவிடுகின்றதென்று பரதன் வருந்தித தீக்குதித்து உயிர்துறந்துவிடுவனோ வென்பதைச் சிந்தித்து, தாம் மீண்டுவந்த செய்தியைப் பரதனிடஞ்சொல்லி அவன் கருத்தை உணர்ந்துகொண்டு விரைந்துவருமாறு அனுப்பப்பட்டுப் பரதனிடஞ்சென்றிருந்த அநுமன் அவனுக்குச் செய்தி கூறி மீண்டனனாக, அச்சமயத்தில் அநுமானுக்காக

முனிவன் தனியே ஓரிலையை மறுபடியும் வருவிக்க வேண்டாதபடி ஸ்ரீராமன் அனுமனைத் தனது எதிரில் இருந்து தனது இலையிலேயே ஒருபகுதியில் உண்ணும்படி நியமித்து அங்ஙனமே அவனுடன் சில பழங்களை ஸஹபோஜனஞ் செய்தனன் என்ற வரலாறு இங்கு அறியத் தக்கது. இராமபிரான் அனுமானுடன் ஸஹபோஜனஞ் செய்த செய்தி வாஸிஷ்ட ராமாயணத்திலுள்ளதென்பர்: (அந்நூல் ஜ்ஞாநவாஸிஷ்டத்தினும் வேறானது; ச்லோகந்தோறும் காயத்ரியின் அக்ஷரங்களை முறையே முதலெழுத்தாகக்கொண்டு தொடங்குவது.) ஆசார்யஹ்ருதயத்தில் "ம்லேச்சனும் பக்தனானால்" இத்யாதியான 85-ம் ஸூத்ரத்தில்—"தூது மொழிந்து நடந்து வந்தவர்களுடைய வார்யக் ஸகுண ஸஹபோஜநமும்" என்ற விடத்து வியாக்யானத்தில் "உபகாராய ஸுக்ரீவோ ராஜ்ய காங்க்ஷீ விபீஷண:, நிஷ்காரணாய ஹநுமாந் தத்துல்யம் ஸஹபோஜநம்" என்று திருவுள்ளம்பற்றிக் கோயில் வாய்மையினோடு முடனே யுண்பனென்ற பெருமாளோடு பண்ணின ஸஹபோஜநமும்" என்று மணவாளமாமுனிகளருளிச்செய்த ஸ்ரீஸூக்தியில் உதாஹரிக்கப்பட்டுள்ள வசநம் வாஸிஷ்ட ராமாயணத்திலோ பாத்மோத்தரத்திலோ உள்ளதென்று பெரியோர் கூறுவர். அந்த வசனத்தின் கருத்தாவது—ஸுக்ரீவன் விபீஷணன் முதலானவர்கள் ஒவ்வொரு ப்ரதிப்ரயோஜநத்தை விரும்பிச் செய்தார்கள்: அங்ஙனன்றியே அனுமான் ஒருவனே அநந்யப்ரயோஜநனாக உதவினனாதலால் அவனோடு உடனுண்பதே நமக்கு ஏற்றது என்பதாம். ஆசார்ய ஹ்ருதயத்தி லருளிச்செய்யும் ரீதியை நோக்குமிடத்து ஸ்ரீராமன் அனுமனோடு ஸஹபோஜநஞ் செய்தருளினது விளங்கும்.

மாகமாநிலமுழுதும்வந்திறைஞ்சும் மலரடிக்கண்டமாமறையாளன்*
தோகைமாமயிலன்னவரின்பம் துற்றிலாமையிலத்த! இங்கொழிந்து*
போகம்நீயெய்திப்பின்னும்நம்மிடைக்கே போதுவாயென்றபொன்னருளெனக்கும்
ஆகவேண்டுமென்றடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே.

கோவிந்தஸ்வாமி யென்பானொரு பிராமணன் இதிஹாஸ புராணங்களைப் பலகாலுங் கேட்டு அதனாலே கண்ணபிரானுடைய பால்ய சேஷ்டிதங்களையும் ராஸக்ரீடை [குரவைகோத்தல்] முதலிய திருவிளையாடல்களையும் ஸாக்ஷாத்காரமாகக்கண்டு களிக்கக் கருத்துக்கொண்டவனாய், 'இதை எம்பெருமான் பக்கல் நாம் பிரார்த்தித்தால் அப்பெருமான் அருள்செய்யக் குறையில்லை' என்றெண்ணி *ஊன்வாடவுண்ணாது உயிர்காவலிட்டு உடலிற் பிரியாப்புலனைந்தும் நொந்து தான்வாடவாடத் தவஞ்செய்கையில், எம்பெருமான் இவனது நினைவின்படியே க்ருஷ்ணாவதார க்ருத்யங்களையெல்லாம் அவ்வண்ணமே ஸாக்ஷாத்கரிப்பித்து 'இன்னமும் உனக்கு வேண்டுவதென்?' என்று கேட்டருளினன்; அதற்கு இவன் 'தேவரீரோடுகூடவே அத்தாணிச்சேவகனாயிருந்து நித்யாநுபவம் பண்ணிக் களிக்க விரும்பியிருக்கின்றேன்' என்றான்; இவன்றான் வாயாலே இங்ஙனே கூறினனாயினும் உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியுமெம்பெருமான் அவனுடைய நாபியிலுள்ள உண்மைக்கருத்தை உள்ளபடியே கண்டறியவல்லவனாதலால் 'இவனுக்கு நம்மோடு நித்யாநுபவம் பண்ணுகைதான் உண்மையான விருப்பமோ?', என்று ஆராய்ந்து பார்த்தான்; பார்த்ததில், 'இவனுக்கு சப்தாதிவிஷய போகங்களில் இன்னமும் நசை விட்டபாடில்லை' என்றறிந்து, அந்தணா! நீ இன்னம் சிறிதுகாலம் இந்நிலத்திலேயேயிருந்து விஷயபோகங்களை ஆசை

தீரச்செய்து தலைக்கட்டி, பின்பு நம்மோடே வரக்கடவாய், என்றருளிச்செய்து அந்தர்த்தான மடைந்ததாக ஒரு இதிஹாஸமுண்டு; ... ... ◦

துளங்குநீண்முடியரசர்தங்குரிசில் தொண்டைமன்னவன்திண்டிறலொருவற்கு*
உளங்கொளன்பிேனாடின்னருள்சுரந்து அங்கோடுநாழிகையேழுடனிருப்ப*
வளங்கொள்மந்திரம்மற்றவற்கருளிச்செய்தவாறு அடியேனறிந்து* உலக
மளந்தபொன்னடியேயடைந்துய்ந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே!

சோழநாட்டரசனுடைய குமாரனும், தொண்டைநாட்டரசனுமான தொண்டைமான் சக்கரவர்த்தி திருவேங்கடமலையில் எம்பெருமானையடுத்து மிக்க பக்தியுடனே சிந்தித்து வந்தித்து வாழ்த்தி வழிபாடுசெய்ய, திருவுள்ளமுகந்த அத்திருவேங்கடமுடையான் மெய்த் தொண்டனான அவ்வரசனை நண்பனாகக்கொண்டு அவன் வரும்பொழுதெல்லாம் தனது அர்ச்சாவதார வரம்பைக் கடந்து அவனுடன் பேசுபவனாயின னென்றும், அவ்வரசனுக்கு அஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தையும் அதன் அருமையான பொருள்களையும் மற்றும் பல ஹிதங்களையும் உபதேசித்தருளினதுமன்றி, அவனுக்குப் பகைவெல்லுதற் பொருட்டுத் தனது சங்கசக்ரங்களையும் கொடுத்தருளினனென்றும், அவ்வரசன அந்தப் பெருமானுக்குக் கோபுரம் மண்டபம் திருமதிள் முதலிய திருப்பணிகள் செய்தனனென்றும் ப்ரஸித்தமான வரலாறு அறிக.

## திருப்பாணாழ்வார் திருவாக்கில் சிறியதோர் அநுபவம்

இவ்வாழ்வார் அருளிய அமலனாதிபிரானில் நான்காவது பாசுரத்தில் மூன்றாமடி *மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான்* என்பது. இங்குக் கூறிய வண்டும் மயிலும் ஸ்ரீரங்கநாதனே யென்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார். அவர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் (ச்லோ. 10) „லக்ஷ்மீகல்பலதோத்துங்கஸ்தநஸ்தபகசஞ்சல:, ஸ்ரீரங்கராஜப்ருங்கோ மே ரமதாம் மாநஸாம்புஜே" என்ற சுலோகத்தில் ஸ்ரீரங்கநாதன் வண்டாகவும், மேலே (ச்லோ. 44) ¤பரலயஸமயஸம்பதம...அநுசிகிநி சிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம¤ என்ற சுலோகத்தில் அப்பெருமானே மயிலாகவும் கூறப்பட்டிருப்பது காண்க. ... ... ... ... ◦

## சென்னையில் திருப்பாவை

ஸ்ரீராமாநுஜன் பத்திராதிபரான ஸ்ரீமத் P B. A ஸ்வாமி 1931ல் சென்னையில் தொடங்கிய திருப்பாவை ப்ரவசனம் மார்கழிதோறும் இடையறாது நடந்து வருகிற முறையில் இவ்வருஷமும் 16—12—74 திங்கட்கிழமை தொடங்கி தினந்தோறும் மாலை 6 மணி முதலாக G. T. கோவிந்தப்ப நாய்க்கன் வீதியில் உப்பட்டூர் ஆழ்வார்செட்டி சாரிடி ஹாலில் நடைபெறுகின்றது. ஆகவே மார்கழி முழுதும் ஸ்ரீ ஸ்வாமிக்கு விலாசம்:—

SRI P. B. ANNANGARACHARIAR,
*48, 49. Govindappa Naicken Street,*
G. T. MADRAS-1—600001.

இங்ஙனம்:—
**தி. அ. அனந்தாழ்வான்.**

# கீர்த்திமூர்த்தி. ஸ்ரீமத். காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி

## (அற்புதமான கனவிலநுபவம்)

அடியேன் வெகுநாளாகவே இரவில் உறக்கமற்றிருக்கிறேனென்பதை ஆப்தர்கள் அறிவர்கள். திவ்யப்ரபந்த மஹாநிதியும், (ஸம்ஸ்க்ருதத்தில்) ஸர்வ சாஸ்த்ரார்த்த ரத்நாவளியும் எழுதத் தொடங்கினபின்பு வேறு எந்த சிந்தனையுமின்றிக்கே அல்லும் பகலும் அதுவே பணியாக இருந்துவருகிறேன். தூக்கம் வராவிட்டாலும் இரண்டு மணிகாலமாவது படுக்கையில் சாய்ந்துகிடக்கவேணுமென்று டாக்டர் கட்டளையாதலால் பகலில் ஒரு இரண்டு மணிகாலமும் இரவில் ஒரு மூன்று மணிகாலமும் அங்ஙனே கிடக்கிறேன். மற்றபோதெல்லாம் பெரும்பாலும் என் தலையெழுத்துப்படி ஏதோ எழுதிவருகிறேன். எழுதுவதெல்லாம் மறுநாளே அச்சாகிவருகிறது. அடியேன்வரையில் காகிதப் பஞ்சமில்லாமை எம்பெருமான் திருவருளே. (அல்லது) ஆப்தர்களின் அருளே. பகலில் எழுதுவதிற்காட்டிலும் இரவில் எழுதுவதே மிக்க மனமகிழ்ச்சியைத் தருகின்றது. விஷயங்களும் விசேஷமாக ஸ்புரிப்பது அப்போதுதான். இரவு 9 மணியிலிருந்து 12 மணிவரை டாக்டர் கட்டளையை ஒருவாறு நிறைவேற்றிவிட்டு, படுக்கையிலிருந்துகொண்டே எழுதத் தொடங்கினால் 5 மணிவரையில் 30 ஸைடுக்குக் குறையாமல் எழுதியாகிறது.

**இதெல்லாம் இங்கெழுதுவது பெருமையைக் காட்டிக்கொள்ளும் முறையிலன்று; எனது தினசரியைத் தெரிந்துகொள்ள விரும்பிப் பலகால் கடிதமெழுதும் அன்பர்களின் மனச்சாந்திக்காகவத்தனை. அவரவர்களுக்குத் தனித்தனியே எழுதமுடியாமை.**

இரவு 9—12 மணியிடையில் ஸ்வல்ப நித்திரையில் கனவுதான் அதிகம். பலபல ஆப்தர்களைக் கனவில் கண்டு களிக்க நேரும். **ஸ்ரீமநுபயவே.** என்கிற பட்டத்திற்கு ப்ரதாந லக்ஷ்யபூதரான (வைகுண்டவாஸி) காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி **இன்றிரவு** கனவில் ஸேவைஸாதித்த அதிசயத்தை இங்கு விஜ்ஞாபிக்கிறேன். 9—12—74 இரவு 12 மணிக்குள் கண்ட கனவை உடனே எழுந்து 12-20க்கு இக்கட்டுரை எழுதுகிறேன். ஆகவேதான் "இன்றிரவு கனவில்" என்றெழுதலாயிற்று. சிங்கப்பெருமாள் ஸ்வாமியை முதன்முதலாக நான் ஸேவித்தது காரப்பங்காடு அக்ரஹாரத்தில். ஸ்ரீரங்கநாராயண ஜீயராஸ்தானத்தை யலங்கரித்தருளியிருந்த (மஹாவித்வான்)தேசிவரதாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரரான [வர்த்தமாந] ஸ்ரீமத் தேசிரங்கராஜாசார்யர் என்றைக்கு ஜனித்தாரோ அன்றைக்குத்தான் எனபது திடமான ஞாபகம். அதற்குப் பிறகு சிங்கப்பெருமாள் ஸ்வாமியை கோயில் முதலான பலவிடங்களில் பலகால் ஸேவிக்கப் பெற்றிருந்தாலும் முதன் முதலாக ஸேவிக்கப் பெற்றது காரப்பங்காட்டில். அன்றைய திருக்கோலம் சிறிதும மாறாமல் இன்று கனவில் ஸேவை ஸாதித்தபடி. •தொலலையின்பத்திறுதி கண்டேன்

### — இன்றிரவு கண்டகனவின் வரலாறு —

"யுவா ஸ்யாத் ஸாது யுவாத்யாயக:" என்கிற உபநிஷத்வாக்யம் அதிகம்பீரமாகச் செவிப்படுகிறது. உடனே சிங்கப்பெருமாள் ஸ்வாமி அம்மாஞ்சி

ஸ்வாமி யென்கிற வேங்கடாசார்ய ஸ்வாமியுடன் என்னெதிரே ஒரு நாற்காலியில் வீற்றிருந்து ஸேவை ஸாதிக்கிருர். உடனே அடியேனெழுந்து ஸேவித்துவிட்டுத் திருமலையில் நின்றும் எழுந்தருளுகிறபடியோ? என்கிறேன். ஆமாம் என்று ஸாதித்துவிட்டு, கையிலுள்ள ஸ்ரீ ராமாநுஜன் ஸஞ்சிகையைப் பிரித்துக் காட்டி 'இதில் முக்கியமானபாசுரம் விடுபட்டுவிட்டதே, ஏன்?' என்று கேட்டருளினுர். 'எத்தனையோ நூற்றுக்கணக்கான பாசுரங்கள் விட்டிருக்கும்; ஸ்வாமி திருவுள்ளம் பற்றுகிற பாசுரம் எது?' என்று வினவுகிறேன். ஸ்வாமி புன்முறுவலுடன் 'உன்மனத்தாலென்னினைந்திருந்தா யென்கிற பாசுரம்' என்று உரக்க ஸாதிக்கிருர். அப்போதடியேன் விஜ்ஞாபிக்கிறேன்—உகர வரிசையில் அப்பாசுரம் இடம்பெறவேண்டிய இடம் இன்னும் வரவில்லையே; அதற்கு உரிய இடத்தில் அதுவராமலிராது—என்றேன். அதற்கு ஸ்வாமி "உகரம் தொடங்கும்போது அந்தப்பாசுரந்தான் முதல் ஸ்தானம் பெறவேண்டும்" என்று ஸாதித்துக்கொண்டே புறப்பட்டெழுந்தார். கண்ணும் விழித்தது.

அன்பர்காள்! ஸ்ரீஸ்வாமி இடையிடையே ஸாதித்த சிலபல வார்த்தைகளை அடியேன் இங்கு எழுதவில்லை. உள்ளத்துள்ளே உன்னியுன்னி யுகக்கின்றேன்; அது போதும். *உன்மனத்தா லென்கிற பாசுரத்தை ஸ்ரீ ஸ்வாமி நினைவூட்டா திருந்தால் மஹாநிதியில் அது விடுபடவுங்கூடும். ஸ்ரீ ஸ்வாமிநியமித்தவுடனே அதை எழுதிவிடவேணு மென்னுமாசையினுல்இப்போதே (அதாவது 9—12—74 இரவு ஒரு மணிக்கே — இந்த்வியாஸம் எழுதினகையோடே ஒருவாறு எழுதிவிட்டேன். (அதையும் சிறிது விஜ்ஞாபிக்கிறேன்.)



"தென்னுடு வடநாட்டுத் திருப்பதி யாத்திரை" என்ற மகுடமிட்டு மூன்று மாதமாய் திவ்ய தேசாநுபவவியாஸமொன்று எழுதி வெளியிட்டுவருகிறேனல்லவா? அதில், திருவல்லிக்கேணி தொடங்கி எழுதவேண்டியிருந்தது. திருவல்லிக்கேணி, திருவெவ்வுளுர், திருநின்றவூர், திருநீர்மலை, திருக்கடன்மல்லை—ஆகிய திருப்பதிகளைப்பற்றி [விரிவாக எழுத நினைத்திருந்தவற்றைச் சுருக்கிக்கொண்டு] திருவிடவெந்தையைப்பற்றி யெழுதித் தலைக்கட்டினேன். சிங்கப்பெருமாள் ஸ்வாமி நியமனத்தை அதில் ஒருவாறு நிறைவேற்றினேன். இவ்விதழிலேயே அதனைக் காணலாம். மஹாநிதியில் அதற்குரிய இடத்தில் அந்தப் பாசுரம் விரிவான விவரணம் பெறும். ...இதோ எதிரே வைத்திருக்கும் கடியாரத்தை நோக்குகிறேன்; மணி ஏற்றத்தாழ் வின்றி 4 ஆயிற்று. வியாஸங்கள் காலையில் அச்சுக்கூடம் சேர்ந்துவிடும். நாளை மார்கழிமாதப் பிறப்பன்று அன்பர்கள்காணக் கிடைத்துவிடும். ... ... *

# தில்லியில் நம்மாழ்வார் திவ்யமங்கள விக்ரஹ ப்ரதிஷ்டை

(*E.* வைகுண்டமையங்கார், Delhi)

தில்லியில் சக்ரவர்த்தி திருமகன் ஸன்னிதியில் ஸ்ரீ நம்மாழ்வார் திவ்ய மங்கள விக்ரஹ ப்ரதிஷ்டா மஹோத்ஸவம் 22—10—74 தொடங்கி 25—10—74 வரை பாஞ்சராத்ர ஆகமப்படி சிறப்புற நடந்தேறியது. நான்கு தினங்களும் நாலாயிர திவ்ய ப்ரபந்த சேவை, வேதபாராயணம், ஸ்ரீ ராமாயண, ஸ்ரீவிஷ்ணுபுராண பாராயணங்களும் தொடர்ச்சியாக நடந்தன. பூர்ணாஹுதியன்று (25—10—74) கோயிலில் எல்லா எம்பெருமான்களும் விசேஷ திருமஞ்சனம் கண்டருளினர். அன்று கோஷ்டியில் 250 ஸ்ரீ வைஷ்ணவ ஆஸ்திகர்கள் குழுமியிருந்து சாற்றுமறையில் பங்கெடுத்துக்கொண்டு தீர்த்தப்ரஸாதம் ஸ்வீகரித்தது கண்கொள்ளாக் காட்சியாக யிருந்தது. அச்சமயம் அன்னகூட உத்ஸவம் போன்று, பெருமாள் ஏராளமான பிரஸாதம் அமுதுசெய்து, விநியோகம் செய்யப்பட்டது. ஸம்ப்ரோக்ஷண செலவு பூராவும் ஆஸ்திக பெருமக்கள் நன்கொடை யளித்து ஏற்றது மகிழ்ச்சிக்குரிய விஷயம். அன்றே சென்னையிலிருந்து ஸ்ரீராமமந்திர் ஸ்தல ஆசாரியரான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமிகளும், காஞ்சி ஸ்ரீமான் உ. வே. மஹாமஹிமோபாத்யாய ப்ர. ப. அண்ணங்கராசாரியரும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பி மங்களாசாஸனம் செய்தருளினர். அவர்கள் ஸ்ரீமுகத்தில் ''ஒவ்வொரு ஸ்ரீ வைஷ்ணவ சன்னிதியிலும் 'பராங்குச பரகால யதிவராதிப்யோ நம:' என்றபடி நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், இராமானுசர் இவர்களின் திவ்யமங்கள விக்ரஹங்கள் சேவை சாதிப்பது அவச்யம்; ஆகையால், அடுத்தபடியாக சக்ரவர்த்தி திருமகன் சன்னிதியில் திருமங்கை மன்னன் அர்ச்சாரூபத்தை பிரதிஷ்டை செய்ய பிரயத்னம் பண்ண வேண்டும்' என்று வற்புறுத்தி இருந்தனர். சாத்துமுறை கோஷ்டியிலேயே டில்லிவாழும் பரம பாகவதோத்தமர்களான ஸ்ரீ K. R. ராஜகோபாலய்யங்கார் முதலிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் தலா ரூ. 101 கொடுப்பதாக வாக்களித்து கலியன் விக்ரஹ ப்ரதிஷ்டை ஆரம்பிக்க உத்ஸாஹமளித்தனர்.



நம்மாழ்வார் விக்ரஹ பிரதிஷ்டையும், ஸம்ப்ரோக்ஷணமும் இனிது நடைபெற அடியேனுக்கு மிகவும் ஒத்தாசையாக இருந்த எல்லா ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகளுக்கும் முக்கியமாக ஸ்ரீ A. ராமானுஜாசாரியர், (சென்னை) ஸ்ரீ சுந்தரவரதாசாரியர், (சென்னை) டில்லி ஸ்ரீ A.K. கிருஷ்ணசாமி அய்யங்கார், ஸ்ரீ T.A.K. அனந்தாழ்வான் அய்யங்கார் ஆகியோருக்கு அடியேனுடைய ஹிருதயபூர்வமான க்ருதஜ்ஞதை உரித்தாகும். மங்களம்.

# கனவிலறிந்த அர்த்தம்

ஸ்ரீமான் உ. வே. தி. அ. அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர், M.A.

ஓரிடத்தில் அடியேன் உபந்யஸித்துவருகையில், "யே யதா மாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம்யஹம்" என்கிற கீதாவசநத்தை (4–11) மேற்கோள் காட்டி அதன் பொருளை விளக்க விருக்கையில், ஸபையில் வீற்றிருந்த ஓர் பெண்மணி, "நம்மைப் போலவே எம்பெருமானும் ஒருவர் மூலமாகவே நம்மை யங்கீகரிக்குமென்றபடி" என்கிறாள். இதைக் கேட்டு அடியேன் மிகவும் வியப்புற்றேன். நாம் பிராட்டியை முன்னிட்டே எம்பெருமானை யாச்ரயிப்பது போல, அவனும் பிராட்டியை முன்னிட்டே நம்மை யங்கீகரிக்கின்றானென்பது இக் கீதாவசனத்தின் கருத்தென்று சொன்னபடி. கனவு கலைந்துவிட்டது. "தாந் ததைவ பஜாம்யஹம்" என்பதற்கு இப்படியுமொரு அர்த்தமுண்டென்று இதுகாறும் அடியேன் கேட்டதில்லை. கீதையில் பல ச்லோகங்களுக்கு நம் பாஷ்யகாரர் ஸாதிக்காத, ஆனால் ரஸமான அர்த்தங்களைப் பெரியோர் ஸாதிக்கக் கேட்டிருப்பதுண்டு. ஆனால் இது புதிய விஷயமாயிருந்தது. நாள் பூராவும் இதுவே சிந்தையாயிருந்தது. அர்த்தம் மிகவும் பொருத்தமாக விருக்கிறது. ப்ரபத்யந்தே, ததைவ என்கிற பதங்களும் மிகவும் ரஸமுள்ளனவாகின்றன. இவ்விஷயத்தில் பெரியோர்கள் திருவுள்ளத்தை யறியவேண்டி இதை விஜ்ஞாபித்தபடி.

ஸ்ரீ வசனபூஷணத்தில், "இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடுமென்னுமிடம் அபயப்ரதாநத்திலும் காணலாம்" (151), "இருவர் முன்னிடுகிறதும் தந்தாம் குற்றங்களை சமிட்பிச்கைச்காக"(152)என்று தொடங்கி எட்டு சூர்ணிகைகளால் ஒரு சிறந்த அர்த்தம் காட்டப்படுகிறது. அதாவது, தீரக்கழிய அபராதம் செய்துபோந்த சேதநன் திடீரென்று ஒருநாள் ஏதோ நினைத்துக்கொண்டு எம்பெருமானை யாச்ரயிக்க விரும்பி,துணையின்றித் தானே நேராகச் சென்றால், சேதனனுடைய அளவற்ற குற்றங்களை நன்கறிபவனான ஸர்வேச்வரன் இவனை தண்டிக்கவும் கூடுமாகையால், அபராதங்களைப் பொறுப்பித்து தயையைத் தூண்டுபவளான பெரிய பிராட்டியாரைமுன்னிட்டே ஆச்ரயிக்கவேண்டுமென்பது நமது ஆசாரியர்களின் ப்ரஸித்தமானதொரு உபதேசம். இப்படி தன்னை ஆச்ரயிக்கும் சேதனனைத் தானே நேராக அங்கீகரிக்கக் கூசி எம்பெருமானும் பிராட்டியை முன்னிட்டே அங்கீகரிக்கிறானென்பது கீழே காட்டின ஸ்ரீ வசனபூஷண சூர்ணைகளின் தாற்பரியம். இச்சேதனனுடன் அநாதியான, ஒழிக்க வொழியாத ஸம்பந்தம் தனக்கிருந்தும், அதைத் தானறிந்திருந்தும் கணிசியாதே இத்தனை நாட்களும் இவன் கர்மத்தையே பார்த்து உபேக்ஷித்திருந்த ஈச்வரனும் இன்று இவனை யங்கீகரிக்க ஸங்கோசப்பட்டு அபராதத்தைப் பொறுப்பிக்கவல்ல பிராட்டியை முன்னிட்டே யங்கீகரிப்பனாம்! பிராட்டி ஈச்வரனின் இக்குற்றத்தைச் சேதனன் பொறுக்கும்படி செய்துவிடுவளாம்! இவ்வர்த்தத்தைப் பிள்ளையுலகாசிரியர் பல சூர்ணிகைகளால் ஸ்தாபித்தருளுகிறார். பல உதாஹரணங்களையும் காட்டுகிறார். "பக்தர்களைப் பேணாமல் பல நாள் துடிக்க விட்டேனே!" என்று எம்பெருமான் துக்கப்படுவதாகவும் வெட்கப்படுவதாகவும் அவதார சரித்திரங்களில் கேள்விப்படுகிறோம். அவ்வவதாரத்தைப் பொறுப்பிக்க அவன் பிராட்டியின் உதவியை நாடுகிறானென்பது உலகாசிரியர் காட்டியருளும் சீரியதோர் மஹார்த்தமாகும்.

"யே யதா மாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம்யஹம்" என்கிற பாசுரத்திற்கும் இது அர்த்தமென்பது தான் அபூர்வமாகத் தோன்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் **அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்**

# திவ்யப்ரபந்த மஹாநிதியில் (3)

197. **உகந்தவூரெல்லாம்.** திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் (பா. 6.) ''தானுகந்தவூரெல்லாம் தன் தாள் பாடி'' என்றருளிச் செய்தமையால் ஸத்ஸம்ப்ரதாயப் பெரியார்கள் திவ்யதேசங்களை உகந்தருளின நிலங்கள் என்றே வழங்குவர். உகந்தருளின நிலங்களைப் பற்றின ஓர் ஆராய்ச்சி கேண்மின். நூற்றெட்டுத் திருப்பதிகளென்பவற்றில் திருநாடு நீங்கலாக நூற்றேழு திருப்பதிகளை இந்நிலவுலகில் ஸேவித்து வருகிறோம். இவற்றில் சில திவ்யஸ்தலங்களைப் பற்றி விசாரம் நெடுநாளாகவே தொடர்ந்து வருவதுண்டு. திருவித்துவக்கோடு, திருவஞ்சிக்களம் ஆகிய இவ்விரண்டு ஸ்தலங்களைப்பற்றிச் சிலர் [இக்காலத்தவர்கள்] தங்கட்குத் தோன்றியபடியே முடிவுகட்டியுள்ளார்கள். அவர்கள் *கொங்குங் குடந்தையுங் கோட்டியூரும் பேரும்* என்ற பெரியாழ்வார் திருமொழிப்பாசுரத்தில் **பேரும்** என்றது கொங்கு நாட்டிலுள்ள பேரூரையே யென்றும் எழுதிவைத்திருக்கிறார்கள். அவர்களைப்பற்றி நமக்கு விசாரமில்லை. நான்முகன் திருவந்தாதியில் *ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்* என்றது கபிஸ்தலத்தில் சயனத்திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கின்ற பெருமானை யென்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தினால் நிஸ்ஸந்தேஹமாக விளங்கா நிற்கவும் ஸ்தலத்தின்பெயர் மூலத்தில் பொறிக்கப்படாமையால் இப்பாசுரம் கபிஸ்தலவிஷயமன்று என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள் சிலர். பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திக்குக்கட்டுப்படாமல் பேசுகின்றவர்களைப் பற்றி நமக்கு விசாரமில்லை. வடநாட்டுத் திருப்பதிகளில் நைமிசாரண்யத்திற்கும் திருமலைக்குமிடையில் திருமங்கையாழ்வார்பாடின சிங்கவேள்குன்றம் கடப்பா ஜில்லாவிலுள்ள ஸ்ரீமதஹோபிலக்ஷேத்ரமென்கிறோம். வியாக்கியானத்தில் அஹோபிலமென்கிற திருநாமத்தின் ஸ்பர்சமேயில்லாமையாலும், ஆந்திர மண்டலத்திலுள்ள ஸுப்ரஸித்த வைபவசாலியான ஸிம்ஹாசலக்ஷேத்திரமே சிங்கவேள் குன்றமென்றும், நைமிசாரண்யப்ராந்தத்திலுள்ள ஒருபர்வத விசேஷமே இதுவென்றும் சில விமர்சகர்கள் சொல்லக் கேட்டிருந்தேன். ஆனால் இதைப்பற்றி விவாதமிருப்பதாகத் தெரியவரவில்லை யாதலால் இதை விட்டிடுகிறேன். *கவ்வுநாயுங் கழுகும் உச்சிப்போதொடு கால் சுழன்று தெய்வமல்லாற் செல்லவொண்ணாச் சிங்கவேழ் குன்றமே* என்கிற ஆழ்வார் பாசுரத்தை ஊன்றி நோக்குங்கால் ஆழ்வாராலும் அணுகவொண்ணாதபடி மிகவும் பயங்கரமாயிருந்த ஓரிடம்—சிங்கங்களும் யாளிகளுமே திரண்டுருண்டு திரியுமிடம் சிங்கவேள் குன்றம் என்னலாயிருந்தது. அங்கு ஆழ்வார் நேராக எழுந்தருளி மங்களாசாஸனம் செய்தருளியிருப்பரா? என்பது ஸந்தேஹாஸ்பதமே. பாசுரம் இந்தஸந்தேஹத்தை விளைவிக்கின்றது. *மஹாஜநோ யேந கதஸ் ஸ பந்தா: * என்னுங் கட்டளையிலே இப்போது நாம் ஸேவித்துவருமதாய் அஹோபிலமென்பதான க்ஷேத்ரமே சிங்கவேள் குன்றமாயிருக்கலாம். இதுவன்று, வேறு என்பதற்குப் புஷ்கலமான ஆதாரம் காட்டுவாரில்லை. கண்டமென்னுங்கடி நகர், பிரிதி என்கிற இரண்டு திருப்பதிகளைப்பற்றி ஈண்டு முக்கியபாக விஜ்ஞாபிக்கிறேன். முதலில் கண்டங்கடிநகர். இது பெரியாழ்வாரொருவரே பாடியது. இவ்வாழ்வார் திவ்யதேசங்களுக்குப் பதிகம் பாடத்

தொடங்கியது நாலாம் பத்தில். திருமாலிருஞ்சோலைக்கு இரண்டு பதிகங்களும் திருக்கோட்டியூர்க்கு ஒருபதிகமும் பாடி, மேலே திருவரங்கம் பெரிய கோயிலுக்கு மூன்றுபதிகங்கள் பாடுவாராய் அதற்கு முன்னே ஒருபதிகம் **கண்ட மென்னும் கடிநகரே** யென்று பாடியுள்ளார். எட்டாவது பிராயத்தில் திருத்தகப்பனரிடம் மூலம் சந்தை சொல்லிக்கொள்ளும்போதே இப்பதிகத்தின் சொற்சுவையில் அடியேனது மனம் உருகிக்கொண்டிருந்தது. இப்போதும் அருளிச்செயல் ஸேவிக்குங்காலங்களில் இத்திருமொழி ஸேவிக்கும்போது விலக்ஷண விகாரமடைந்தே தீருவேன். பெரியாழ்வார் திருவாக்கில் இப்பாசுரங்கள் வெளிவந்த அழகு என்னே! என்னே!! என்னச்செய்யுமத்தனை. வதரி யாத்திரையில் ஒருவிசை இத்தலத்தில் அடியேன் பெற்றபேறு ஸ்ரீராமாநுஜனில் (225ல்) விளக்கப்பட்டுள்ளது காணவேணும். அதுநிற்க. இத்தலம் எங்குள்ளதென்பது நெடுநாள் விசாரத்திலிருந்தது. ஸ்ரீபதரிகாச்ரம மார்க்கத்தில் தேவப்ரயாக மென வழங்கப்படும் ஸ்தலமே கண்ட மென்னுங்கடிநகர் என்று பெரியார் சொல்லக் கேட்டிருந்தேன். முதன்முதலாக நாற்பது வருஷங்களுக்கு முன்பு வதரியாத்திரை விடைகொண்டபோது இத்தலத்தை ஸேவிக்க நேர்ந்தது. (லேட்) நரஹரிசாஸ்திரி முதலான தீர்த்த புரோஹிதர்களின் ஆதரவில் அங்கு அடியேன் தங்கியிருந்தபடியால் அவர்கள் **காதா** என்று அந்நாட்டினர் வழங்கும் ஒரு பெரிய புத்தகத்தைக்கொணர்ந்து இதில் கையெழுத்திடவேணுமென்றார்கள். அதில் பல ஏடுகளைப் புரட்டிப்பார்த்ததில், யாத்திரையாக வெழுந்தருளின வானமாமலை ஜீயர்ஸ்வாமிகள் பலர், அஹோபில ஜீயர் ஸ்வாமிகள் பலர் கோவர்த்தனம் ஸ்வாமி பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமி போல் வாரான பீடாதிபதி ஸ்வாமிகள் பலர்......இன்னும் பலபல ஆசார்யபுருஷர்களும் வித்வான்களும் ''இதுதான் கண்டமென்னுங்கடிநகர்'' என்று திருவெழுத்து சாத்தியிருந்தார்கள் அவற்றின் கீழ் அடியேனையும் அபிப்ராய மெழுதச் சொன்னார்கள். எழுதினேன். என்ன எழுதினேனென்றால், எழுதின சப்தராசிகள் நினைவில்லாவிடினும் அன்று முதலாகவே நெஞ்சிலூறியிருக்குமதைத் தெரிவிக்கிறேன். திருமங்கையாழ்வார் காஞ்சீபுரத்திற்கெழுந்தருளி அஷ்டபுஜப் பெருமாளை ஸேவித்தபோது ''செந்தமிழ்பாடுவார் தாம் வணங்கும் தேவரிவர்கொல்!'' என்றார். செந்தமிழ்பாடுவாரென்று முதலாழ்வார்களுக்கு ப்ரஸித்தமான திருநாமம். 'முதலாழ்வார்கள் பாடின பெருமாளாயிருக்க வேணுமிவர்!' என்று திருமங்கையாழ்வார் திருவுள்ளத்தில் தோன்றிற்று. *கண்டவாற்றால் தனதேயுலகென நின்றான் தன்னை* என்று நம்மாழ்வாரருளியதோ டொக்குமிது. *தொட்டபடையெட்டும் தோலாதவென்றியான், அட்டபுயகரத்தான்* என்று செந்தமிழ்பாடுவார் பாடின பெருமாளிறே அட்டபுயகரத்தான். இதேபோல, *பொங்கொலிகங்கைக் கரை மலிகண்டத்துறை புருடோத்தமனை அடியேன் ஸேவித்தபோதே 'இப்பெருமாள் ஆழ்வார்பாடல் பெற்றிருந்தாலொழிய இப்படி ஸேவைஸாதித்தருள இயலாது' என்றறுதியிட்டேன். இதையே அந்த காதாவில் வடமொழியிலும் ஹிந்தியிலும் வரைந்தேன். இத்தலப்பதிகத்தில் *நலந்திகழ் சடையான் முடிக் கொன்றைமலரும் நாரணன் பாதத்துழாயும், கலந்திழிபுனலால் புகர்படுகங்கைக் கண்டமென்னுங் கடிநகரே* என்றபாசுரத்தின்படி அலகநந்தாவும் பாகீரதியும் இங்கே ஸந்திபெற்றுப் பெருகுமழகைக் காணும்போது.....மேலே என்ன சொல்லுவது? அற்புதமற்புதம்!! இனி திருப்பிரிதியைப்பற்றிக் கேண்மின். இதுவும் ஸ்ரீபதரிகாச்ரமமார்க்கத்திலுள்ள வொருதலமொன்றும், **ஜோஷீமட்** என்னுமிடத்திற்கே பிரிதியென்று பெயரென்றும் பலர் நூற்றெட்டுத் திருப்பதிக் குறிப்பில் எழுதி

வைத்திருந்தபடியால் அதில் ஸ்வரஸமாகவுண்டான ப்ரத்யயத்தாலே ஒரு விதமாக நெஞ்சில் படிந்துவிட்டது. ஆனால் இத்தலத்தை நேரில் ஸேவித்த போது நெஞ்சில் தெளிவு விளையவில்லை. திருமங்கையாழ்வாரொருவரே பாடின தலமிது. 'திருப்பிரிதியானது இமயத்திலுள்ளது' என்னுமிவ்வளவே இத்தலப்பதிகத்தினல் அறியலாகின்றது. வதரிவணங்கும் பதிகத்திற்கும், தெரியாச் சிராமத்துள்ளானைப்போற்றும் பதிகத்திற்கும் முன்னடியே திருப்பிரிதிப்பதிகம் திருவவதரித்துள்ளது. இதில் கங்கையின் ப்ரஸ்தாவகந்தமும் காணவில்லை. வதரியாச்சிராமத்துள்ளான் பதிகத்திலோவென்னில் பாட்டுத்தோறும் கங்கையின் கரைமேலென்றுள்ளது. ஜோஸீமட்டே பிரிதியாயிருந்தால், அங்கும் கங்கைபெருகுவதால் கங்கையின் ப்ரஸ்தாவத்தை விட்டிருக்கவோ முடியாது. மற்றும் பலகாரணங்களினாலும் இது பிரிதியாயிருக்கத் தகுதியில்லையேயென்று நெடுநாளாக அடியேன் மனம் குழம்பியிருக்கின்றது.

**ப்ராஸங்கிகமிது காணீர்.** ஆழ்வார்கள் தென்னாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸனஞ் செய்தருளின முறை வேறு, வடநாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸனம் செய்தருளின முறை வேறு. அதாவதென்னென்னில், சோழ நாடு பாண்டி நாடு நடுநாடு தொண்டை நாடு மலை நாடுகளில் அர்ச்சையாகக் கோயில் கொண்டிருக்கிற எம்பெருமான்களையே பாடினர். வடநாட்டிலோ வென்னில் விபவாவதாரஸ்தல மென்று கொண்டே மங்களாசாஸனம் நிகழ்ந்திருக்கின்றது. மூதலிப்போமிதனை. அயோத்தியிலும் விருந்தாவனத்திலும் காணும் ஸன்னிதிகள் புராதனமல்லவே, நைமிசாரணியத்தில் காணும் கோவில் அதிநவீனம். இத்தலப்பாசுரங்களில் ''நைமிசாரணியத்து ளெந்தாய்'' என்று பாட்டுத்தோறும் ஸம்போதனம் காண்கையாலே அர்ச்சாரூபியான ஒரு பகவானைக்குறித்துப் பாடின பதிகம்போல் தோன்றும்; அரண்யரூபியாக ஸேவைஸாதிக்கும் பகவானைத்தான் விளித்துரைத்த தென்பது நிஸ்ஸந்தேஹம். த்வாரகையில் அர்ச்சாரூபியான பகவான் ஸேவைஸாதிப்பதும் ஆழ்வார்களின் காலத்திற்குப் பிறகுதான். ஆண்டாள் *ஆய்ப்பாடிக்கே யென்னை யுய்த்திடுமின்* பாண்டி வடத்தென்னை யுய்த்திடுமின்* பொய்கைக்கரைக் கென்னை யுய்த்திடுமின் *பத்தவிலோசனத் துய்த்திடுமின்* கோவர்த்தனத்தென்னையுய்த்திடுமின்* என்றது போலவே *சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவரா பதிக்கென்னையுய்த்திடுமின்* என்று மருளிச்செய்தாள்.

திருவாய்மொழியில் ஒன்பதாம்பத்து முதற்பதிகத்தில் பலபாசுரங்களில் *வடமதுரைப்பிறந்தான்* என்றிருக்கவும் ஆசார்ய ஹ்ருதயத்தில் மூன்றும் பிரகரணத்தில் நம்மாழ்வார் பாடின திவ்யதேசங்களை ஒன்றுவிடாமல் நிர்தேசித்து அவ்வவற்றில் விளங்கும் திருக்குணங்களைப் பேசிவருமடைவில் வடமதுரையைத் தொடாமலே போனது அது அர்ச்சாவதாரமன்று என்கிற திருவுள்ளத்தினாலன்றோ. கலியன் திருப்பிரிதியையும் ஸ்ரீபதரிகாச்ரமத்தையும் பாடினதும் அர்ச்சையில் நோக்காகவன்று. வதரியில் இப்போது காணும் ஸன்னிதி திருமங்கையாழ்வார் காலத்தில் இருந்ததில்லை யென்பதைப் பண்டே விமர்சித்து முடித்திருக்கிறேன். கண்டமென்னுங்கடிநகரில் மட்டும் பாசுரந்தோறும் புருடோத்தமனென்று கூறியும் நிகமனத்தில் *புருடோத்தமனடிமேல் விட்டுசித்தன் விருப்புற்றுத் தங்கியவன்பால் செய்தமிழ்மாலை* என்று கூறியு மிருக்கையாலே இங்கு அர்ச்சைத் திருமேனிக்கே மங்களாசாஸனமென்பது நிஸ்ஸந்தேஹம். ... ... ... ... *

198. ***உகந்திவை சூட்ட நீ வாராய்.*** ஆழ்வார்களுக்குள்ளே பெரியாழ்வார் பரமபாக்யசாலியாவர். யசோதைப் பிராட்டி கண்ணபிரானை விபவத்தில் எந்தெந்த வகைகளால் அநுபவித்தாளோ, அந்தந்த வகைகளில் ஒன்றும் வழுவாமே இவ்வாழ்வார்தாம் யசோதைப் பிராட்டியின் வேடம் பூண்டு பாசுர முகத்தாலே அநுபவித்திருப்பது வாசாமகோசரம். ஆண்டாள் தமது திருமொழியில் (8-10.) *போகத்தில் வழுவாத புதுவையர் கோன்* என்றருளிச் செய்திருப்பது இவர்க்கு மிகவும் ஏற்கும். 'பகவதநுபவத்தில் சிறிதளவும் குறையில்லாதவர்' என்பது அதன் பொருள். உள்ளபடி சொல்லில் யசோதைப் பிராட்டி கூட இவ்வளவு அநுபவித்திருக்கமாட்டாள் என்று துணிந்து கூறலாம். அவரது திருமொழியில் (2-7.) *ஆநிரை மேய்க்க நீ போதி* என்று தொடங்கும் பதிகம் பூச்சூடல் திருமொழி யெனப்படும். அதில் (4) மருக்கொழுந்தையும் தமனகமாலையையும் யசோதை கையிற் கொண்டு கண்ணனை நோக்கி *உருவமழகிய நம்பி! உகந்திவை சூட்ட நீ வாராய்* என்றழைக்கிறாள். இதில் (உகந்து) என்ற உகப்பானது சூட்ட நினைக்கிற எசோதைக்குமாகும், சூடிக் கொள்ளப்போகிற கண்ணனுக்குமாகும். கண்ணனுக்கு ஆவதே முக்கியமானது. அவனது உகப்பைக்கண்டு உகப்பதே இத்தலைக்காம். ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்நத்தில் *கதாஹமைகாந்திகநித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி* என்றருளிச் செய்திருப்பதில் சாஸ்த்ரார்த்த மருமம் வெளிவந்திருப்பது காண்க. "கைங்கரியம் செய்து நான் எப்போது ஸந்தோஷிக்கப்போகிறேன்" என்னாதே "உன்னை எப்போது ஸந்தோஷப்படுத்தப் போகிறேன்" என்று ஆளவந்தார் அருளிச் செய்திருப்பதுதான் ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம். *

199. ***உகந்து பணி செய்து.*** திருவாய்மொழியில் (10-8-10) *உற்றேனுகந்து பணி செய்து உனபாதம் பெற்றேன்* என்றது ஸூர்யோதயத்திற்கு அருணோதயம் போன்ற பாசுரமாகும். இதற்கு அடுத்தபடி *சூழ்விசும்பணி முகிற்பதிகத்தில் *மாமணி மண்டபத்து அந்தமில்பேரின்பத்தடியரோடிருந்து உகக்கும்படியைப் பேசப்போகிறார். (உகந்து பணி செய்து) என்றதில் உகந்து என்ற வினையெச்சத்தை (பணி செய்து) என்றதற்கு முன்னேயும் பின்னேயுங் கூட்டி ரஸித்து அநுபவிக்க வேணும். பணி செய்வதற்கு முன்பும் உகப்பு, பின்பும் உகப்பு. ஸ்ரீராமாயணத்தில் *பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதச் சதே* என்று சொன்ன இளையபெருமாளுக்குப்போலே அடிமை செய்யப் பாரிக்கிற தசையே தொடங்கி உகப்பு உண்டாகும். பணிசெய்த பிறகும் 'ஸ்வரூபாநுரூப விஷயத்திலே பணி செய்யப் பெற்றோம்!' என்று உகப்பு விஞ்சியிருக்கும். அப்ராப்த விஷயங்களிலே பணி செய்தால் அது ப்ரயோஜநாந்தரத்தில் ஆசையாலே செய்வதாதலால் எதிர்பார்த்தபடி ப்ரயோஜனம் கிடையாதபோது உகப்பு இல்லையாய்விடும். வகுத்த விஷயத்திலே பணி செய்வது முன்பும் பின்பும் உகப்பாகவேயிருக்கும். உகப்பு என்பதன் பொருள் மகிழ்ச்சி. மகிழ்ச்சிக்குக் காரணங்கள் பலபலவுண்டு; ஒரு ரஸிகர் கூறியிருக்கும் பாசுரமொன்று கேளீர்;- "உண்டு மகிழ்வார் உறங்கி மகிழ்வார், கண்டு மகிழ்வார் கேட்டு மகிழ்வார்; கொண்டு மகிழ்வார் கொடுத்து மகிழ்வார், உடுத்து மகிழ்வார் படித்து மகிழ்வார், தொண்டு மகிழ்வார் துணையிலரிவரே" என்று. (சிறிது விவரிப்போமிதனை.) **உண்டு மகிழ்வார்**-வயிறாரவுண்டு அதனால் மகிழ்வார். **உறங்கி மகிழ்வார்**-ஒரு வேலையுமின்றி உண்பதும் உறங்குவதுமேயாயிருந்து மகிழ்வார். **கண்டு மகிழ்வார்**-பகவத் பாகவதர்களையோ உற்றுறவினரையோ

கண்டு அதனால் மகிழ்வார். **கேட்டு மகிழ்வார்**—இதிஹாஸ புராண கதைகளைக் கேட்டோ குடும்பத்தினரின் க்ஷேமஸமாசாரங்களைக் கேட்டோ மகிழ்வார். **கொண்டு மகிழ்வார்**-தாம் தனிகர்களாயிருந்தும் தானம் வாங்கி வாங்கி மகிழ்வார். **கொடுத்து மகிழ்வார்**-பிறர் யாசிக்காவிட்டாலும் தம் பேருகத் தானஞ்செய்து மகிழ்வார். **உடுத்து மகிழ்வார்**-பட்டுப் பீதாம்பரங்களை வாங்கியணிந்து அதனால் மகிழ்வார். **படித்து மகிழ்வார்**-பல கல்விகள் கற்றிருந்தும் மேன்மேலும் எதை யாவது வாசித்துக்கொண்டேயிருந்து மகிழ்வார். **தொண்டு மகிழ்வார் துணையிலராவர்**—(கீழ்ச் சொன்ன வகைகளாலே மகிழ்பவர்களிற்காட்டில்) கைங்கரியஞ் செய்து மகிழ்பவர்களே ஒப்பற்றவராவர் என்றவாறு. *தொண்டே செய்தென்றும் தொழுது வழியொழுகப் பண்டே பரமன் பணித்த பணி வகையே* என்றதும் நம்மாழ்வார் திருவாக்கே. (திருவாய்மொழி 10-4-9) முமுக்ஷுப்படியில் ''சேஷத்வம் து:க்கரூபமாகவன்றோ நாட்டில் காண்கிறதென்னில், அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு ஸுகமாகக் காண்கையாலே'' என்று பிள்ளையுலகாசிரியர் பணித்தது இங்கே அநுஸந்தேயம்.*

200. * **உகப்புருவன் தானே ஒளியுருவன் தானே.** * நான்முகன் திருவந்தாதியில் (பா. 29.) இங்கு (உகப்புருவன்) என்றதற்கு மூன்றுவகையான பொருள் கொள்ளலாம். எம்பெருமானுடைய திவ்யமங்களவிக்ரஹ வைலக்ஷண்யத்தைப்பேசி யனுபவிப்பன முன்னடிகள். **உகப்புருவன்** — கண்டவர்களெல்லாரும் உகக்கும்படியான திருவுருவத்தையுடையவன். *தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமலமன்ன தாள் கண்டார் தாளேகண்டார் தடக்கை கண்டாருமஃதே* என்னும்படியுள்ள திவ்யாவயவங்களை யுடையவனென்கை. (இரண்டாவது பொருள்) நம்மைப்போல் கருமங் காரணமாக சரீரங்களைப் பரிக்ரஹிக்கையன்றிக்கே *இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:* என்கிறபடியே தானும் தமருமுகந்தவடிவைப் பரிக்ரஹிப்பவன். (மூன்றும் பொருள்;) தைத்திரீயோபநிஷத்தில் ஆனந்தமயனைச் சொல்லப்பட்டிருப்பதால், [உகப்பு—ஆனந்தம்] ஆனந்த ஸ்வரூபனாயிருப்பவன். இப்பொருளில் சில விசேஷங்கள் விளக்கப்படுகின்றன பாரீர். ஸ்ரீபாஷ்யத்தில் முதலத்யாயம் முதற்பாகத்தில்(6) *ஆநந்தமயாதிகரணம். இதில் பூர்வ பக்ஷியின் ஒரு ஆக்ஷேபத்தைப்பரிஹரிக்கையில் பரமபுருஷனுக்கு ஸ்வல்பமான துக்க ஸம்பந்தமும் கிடையாதென்றார் ஸ்ரீபாஷ்யகாரர். அவர் தாமே பரமபுருஷனுடைய 'தயா' என்னுங் குணத்தை நிரூபித்தருளுமிடத்து ''பரது:க்காஸஹிஷ்ணுத்வம் — தயா'' என்றருளிச் செய்துள்ளார். அஸஹிஷ்ணுத்வமென்பது து:க்கித்வ பர்யாயமேயன்றோ. அடியார்களின் துக்கத்தை யநுஸந்தித்துத் தானும் துக்கிப்பதுதானே தயாளுத்வமென்பது; இது எப்படி பொருந்தும்? எம்பெருமானிடத்தில் துக்கமுமுண்டு என்று இசைந்தால் ஆநந்தமயத்வம் கொள்வதற்கு இடமில்லாமலன்றோ இருக்கிறது — என்பதாக ஒரு சங்கை தோன்றக் கூடியதுண்டு. இதற்குப் பரிஹாரம் தெரிந்துகொள்ளவேண்டியது வேதாந்திகளுக்கு மிக அவசியமே. இப்படியொரு சங்கை தோன்றுமென்று ஸ்வாமி பாஷ்யகாரர் தாமே திருவுள்ளம்பற்றி இவ்வதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் சில பங்க்திகளை யருளிச்செய்திருக்கிறார்; அவற்றை அநுவதித்துக் காட்டிப் பொருளும் விவரித்துத் தெளிவு பிறப்பிக்கின்றேனிங்கு. இவ்வதிகரணத்தில் இரண்டாவது ஸூத்ரம் ***விகாரசப்தாந் நேதி சேந்ந ப்ராசுர்யாத்*** என்பது. இந்த ஸூத்ரத்தின் ஸ்ரீ பாஷ்யத்தில் மேல் ''யதுக்தம்—ஆனந்த ப்ராசுர்யம் அல்ப துக்க ஸத்பாவம் அவகமயதீதி — தத் அஸத்'' என்று தொடங்கியுள்ள

ஸ்ரீஸூக்திகளின் தாற்பரிய மென்னவென்றால்; பரப்ரஹ்மத்தினிடத்தில் ஆனந்தம் அதிகமாக இருக்கிறது என்று சொல்வதனால் சிறிது துக்கமிருப்பதாகச் சொன்னதாகிறது என்கிற வாதம் பிசகு. ப்ரஹ்மத்தினுடைய ஆனந்தம் அபரிமிதம் என்றால் ஜீவனுடைய ஆனந்தம் பரிமிதம் என்று இவ்வளவுதான் ஏற்படுமேயொழிய ப்ரஹ்மத்தினிடத்தில் ஸ்வல்பதுக்கமிருக்கிறது என்றும் சொன்னதாகத் தேறுவதற்கு வழியேயில்லை. துக்கம் இருக்கிறதோ; இல்லையோ அது வேறு ப்ரமாணத்தினால் ஏற்படவேண்டுமேயொழிய ஆநந்த ப்ராசுர்யத்தைத் தெரிவிக்கிற ஆநந்தமய பதத்தினால் அது ஏற்படாது. ஆனந்தத்திற்கு ப்ரதிகோடியான வஸ்து ப்ரஹ்மத்தினிடத்தில் இல்லையென்பது *அபஹதபாப்மா* இத்யாதியான வேறு ச்ருதியினால் தெரியவருகிறது. அதைப்பற்றி இங்கென்ன? இங்குத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம் இவ்வளவே...பரப்ரஹ்மத்தின் ஆனந்தம் அளவுகடந்ததென்றால் மற்றையோருடைய ஆனந்தம் இப்படியல்லாமல் அற்பமானது என்பதே தேறி நிற்கும்; அது ஆனந்தவல்லியில் ஸ்பஷ்டமாகவே தெரிவிக்கப்படுகிறது. — என்பதாக. இங்கு ஸ்வாமி *அபஹதபாப்மா* என்கிற ச்ருதி வாக்யத்தை யெடுத்துக்காட்டியுள்ளார். அதன் கருத்தை ச்ருதப்ரகாசிகாசார்யர் நன்கு விவரித்துள்ளார். அதை உபநிஷத் பாஷ்யகாரரான ரங்க ராமாநுஜ ஸ்வாமி, ச்சாந்தோக்ய உபநிஷத்தில் *அபஹத பாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோக:* என்னுமிடத்துத் தம்முடைய பாஷ்யத்தில் விளக்கியுள்ளார். அங்கு ''பரமாத்ம ப்ரகரணேஷு'' என்று தொடங்கியுள்ள பங்க்திகளின் தாத்பர்யஸாரமாவது — பரமாத்மாவை அபஹதபாப்மாவென்று சொல்லுவதன் கருத்து. பாபம் செய்யாதவனென்பதல்ல; பாபம் செய்தாலுங்கூட அதன் பலனாக ஹேயஸ்பர்சமுண்டாகப் பெறாதவனென்றபடி. பாபத்தைச் சொன்னது புண்யத்தையும் சொன்னபடியே. பகவான் புண்யபாபங்களைச் செய்தாலுங்கூட அவற்றின் பலன்கள் தன்மீது ஸம்பந்திக்கப் பெறாதவன் என்பதே இங்கு விவக்ஷிதம். பாபம் செய்தால் அதன் பலன் ஸம்பந்திக்காமல் எப்படியிருக்குமென்று கேட்கலாகாது; அதுதான் பகவானுடைய விலக்ஷணமானவொரு தன்மை என்பதாம். நம்போல்வார் பாபம் செய்தால் நமக்கு ஹேயஸம்பந்தமுண்டாகியே தீருகிறது. பகவானுக்கோ அப்படியில்லை. நாம் செய்கிற கருமங்கள் போன்ற கருமங்களைப் பகவானும் செய்வதுண்டு; செய்தாலும் அதனால் அவனுக்கு ஹேயஸம்பந்த முண்டாவதில்லை. காரணமான கருமமிருந்தால் கார்யமான ஹேயஸம்பந்தமில்லாமற் போகுமோவென்று சங்கிக்கக்கூடாது; இதுதான் பகவானுடைய விலக்ஷணமான வைபவம்.—என்று இவ்வளவும் உபநிஷத் பாஷ்யகாரருடைய நிரூபணங்கள். இவ்விஷயத்திற்கு அந்தரதிகரணச்ருதப்ரகாசிகையையும் ஸம்வாதமாக எடுத்துக்காட்டியுள்ளார். அபஹதபாப்மா என்பது எந்த வாக்யத்திலிருக்கிறதோ அதே வாக்யத்தில்தான் விசோக: என்பதுமிருக்கிறது. அங்கும் இதே நியாயமாகத்தான் அர்த்தமாகும். சோகமுண்டானாலும் இதனால் ஹேயஸம்பந்தமுண்டாகப்பெறாதவன் என்றபடி. ஹேயமான சோகமன்றிக்கே கல்யாண குணங்களிற் சிறந்ததான சோகத்தையுடையவன் என்றதாகத் தேறும். எப்படியானாலென்ன? சோகமுள்ளதாக ஒப்புக்கொண்டுவிட்டால் அது ஆநந்தமயத்வத்திற்குக் கொத்தைதானே என்கிறவிந்த வாதத்தையே சிலர் செய்து கொண்டிருக்கலாம். அவர்கள், மேலே யெடுத்துக்காட்டிய உபநிஷத் பாஷ்ய பங்க்திகளில் ''ஈச்வரேண க்ருதாநி புண்யபாபஸஜாதீயாநி கர்மாணி'' ''க்ருதேபி பாபே'' என்றுள்ள ஸ்ரீஸூக்திகளின்மேலும் ஓயாது சோத்யங்களைச் செய்துகொண்டிருக்கலாமத்தனை. இதைப்பற்றின விரிவு இங்கு இவ்வளவு போதுமென்று நிற்கின்றோம். ... ... ... ... *

201. *உகைக்குமேல் எத்தேவர் வாலாட்டும்* (நான்முகன் திருவந்தாதி-38) *பொருகடல் நீர்வண்ணன் உகைக்குமேல், எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும், அப்போ தொழியுமழைப்பு* என்று, எம்பெருமானுடைய பரத்துவத்தைப்பேசுவதிலேயே பரிவுடையரான திருமழிசைப் பிரான் பணித்த பாசுரமாம். [உகைக்குமேல்] உகைத்தலாவது-உபேக்ஷித்தல்; உதாஸீநனாயிருந்துவிடுதல். தேவதாந்தரங்களிடத்தில் தான் ஆவேசியா திருந்த பக்ஷத்தில் என்றபடி. [எத்தேவர் வாலாட்டும்] பிரமன் உலகங்களைப் படைத்தானென்றும், சிவன் திரிபுரமெரித்தானென்றும், இந்திரன் வ்ருத்ராஸுர வதம் பண்ணினானென்றும்.... இப்படி பல தெய்வங்களின் பல பல செய்கைகளைக் குறித்துப் பேசுவதெல்லாம் தெரியுமே. *அவரவர் விதிவழியடைய, நின்றனரே* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின்படி அவ்வோ தெய்வங்களை எம்பெருமான் அநுப்ரவேசித்திராவிடில் ஒரு தெய்வமாவது ஒரு காரியமாவது செய்திருக்கமுடியுமோ? என்றவாறு. (வாலாட்டும் என்றது உலக வழக்கச் சொல்லின் அநுகாரம். அஹங்காரப் படுதலைச் சொன்னபடி [எவ்வாறு செய்கையும்] அந்தணர்கள் யஜ்ஞபாகாதிகளை அனுட்டித்து *இந்த்ராய ஸ்வாஹா, வருணாய ஸ்வாஹா, ஸோமாய ஸ்வாஹா* என்றிப்படி சொல்லி அவ்வோ தேவதைகளுக்கு ஹவிஸ்ஸையளிப்பதெல்லாம்—*வானிடை வாழுமவ்வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்த அவி* என்று ஆண்டாள் அருளிச் செய்தபடி அளிப்பதெல்லாம் அந்தர்யாமியான எம்பெருமானை உத்தேசித்தன்றோ. இந்திரன் முதலான தெய்வங்களில் எம்பெருமான் உள்ளுறைகின்றிலனாகில் அத்தெய்வங்களை நோக்கி ஸ்வாஹா, ஸ்வாஹா என்று சொல்லிச் செய்வதெல்லாம் ஹாஹா! தெரியுமே என்கை. [அப்போ தொழியுமழைப்பு] தைத்திரீயாரண்யகத்தில் *இந்த்ராகச்ச ஹரிவ ஆகச்ச மேதாதிதே!* என்றோதுகிறபடி வா வா என்று சொல்லியழைத்து அவ்வோ தெய்வங்களை ஆவாஹனம் செய்வது மில்லையாகும். ... ... ... *

202. *உக்கமும் தட்டொளியும்* திருப்பாவையில் (20) *நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்* என்று சொல்லியெழுப்பி *உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை, இப்போதேயெம்மை நீராட்டு* என்கிறார்கள் கோபிகள். உக்கமாவது விசிறி. தட்டொளியாவது — கண்ணாடி. எம்பெருமான் ஸன்னிதிக்குச் செல்லும்போது கைங்கர்யத்திற்குரிய உபகரணங்கள் கொண்டு போகவேணும். தொண்டரடிப்பொடியாழ்வார் திருப்பள்ளி யெழுச்சியில் (8) *வம்பவிழ்வானவர் வாயுறை வழங்க மாநிதி கபிலை ஒண் கண்ணாடி முதலா, எம்பெருமான் படிமைக்கலங் காண்டற்கு ஏற்பனவாயின கொண்டு நன்முனிவர், தும்புரு நாரதர் புகுந்தனர்* என்றருளியது காண்க. உக்கமென்கிற திருவாலவட்டம் திருக்கச்சி நம்பி போல்வார்க்குக் கைங்கரிய உபகரணமாயிற்று; கண்ணாடியினால் என்ன காரியம் செய்வது என்று கேட்கக் கூடும். *தமேவ மத்வா பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவத் அர்ஹணீயம்* என்கிற திருப்பள்ளியெழுச்சித்தனியன்படி எம்பெருமானுக்குச் செய்யும் உபசாரங்கள் மஹாராஜர்களுக்குச் செய்யுமுபசாரங்கள் போன்றவையாதலால் மஹாப்ரபுக்களுக்குக் கண்ணாடி கொணர்ந்து கொடுத்தலென்பதும் உபசாரங்களில் ஒன்றாதல் அறிக. திருப்பாவைக்கு உள்ளுறை பொருள் [ஸ்வாபதேசார்த்தம்] பிரதானமாதலால் (தட்டொளியென்று) கண்ணாடியைச் சொன்னது திருமந்திரத்தைச் சொன்னபடி. *வ்யாபகாதர்சமென்பர் திருமந்த்ரத்தை. வ்யாபகமந்த்ரமான திருமந்த்ரமாகிற கண்ணாடி யென்றபடி. உலகில் கண்ணாடியானது எப்படி நம்முடைய தேஹநிலைமைகளையெல்லாம் காட்டித்தருகின்

றதோ, அப்படி திருமந்த்ரமானது நம் ஸ்வரூபவைலக்ஷண்யத்தை நன்கு காட்டித் தருகின்றதாதலால் அதனைக் கண்ணாடி யென்கை மிகப் பொருந்தும். பட்டர் அஷ்டச்லோகியில் (4) *தேஹாஸக்தாத்மபுத்திர் யதி பவதி பதம் ஸாது வித்யாத் த்ருதீயம்* என்கிற ச்லோகத்தினால் திருமந்த்ரம் காட்டித் தருமவற்றை யெல்லாம் விளக்கிக் கூறியுள்ளது காண்க. ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வ சதகத்தில் பெரிய திருவடியைத் துதிக்கும் ச்லோகமான *ச்ருதிமயம் அதிஹர்ஷ* இத்யாதியில் *மணிமுகுரமிவாக்ரே மங்களம் ரங்கதாம்ந:* என்பதனால் கருத்மானைக் கண்ணாடியாகக் கூறி, உத்தரார்த்தத்தில் *யத்ர ரூபஸ்வரூபஸ்வகுண மஹிமதர்சீ மோததே சேஷசாயீ* என்றருளிச் செய்திருப்பதும் இங்கு நினைக்கத்தக்கது. *

203. ***உங்களோடெங்களிடையில்லையே*** திருவாய்மொழியில் (8-2-7) ஆழ்வார் தம்முடைய அதிப்ரவ்ருத்தியைத் தடைசெய்கிற(ப்ராப்தவரையற்ற) அன்னைமார்களையும் தோழிமார்களையும் நோக்கிச் சொல்லும் பாசுரத்தில் *காலம் பல சென்றுங் காண்பதாணை உங்களோடெங்களிடையில்லையே* என்று உதறிச் சொன்ன வார்த்தையின் அழகு காண்க. மேலே (10, 11 பாசுரங்களில்) *கடையறப் பாசங்கள் விட்டபின்னையன்றி அவனவை காண்கொடானே* என்றும், *பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டு* என்றும் அருளிச் செய்வதற்கு ஏற்ப இங்குச் சொன்னவிது இன்சுவைமிக்கது. ''ஸீதாபிராட்டி பெருமாளைக் கைப்பிடித்த பின்பு ஸ்ரீமிதிலையை நினையாதாப் போலே ஆழ்வார் பறவையேறு பரம்புருடனைக் கைப்பிடித்த பின்பு மற்ற வன் பாசங்களை முற்றவும் விட்டபடி'' என்பர் நம் ஆசாரியர்கள். பிராட்டி திருமணம் நடந்த பின்பு பன்னிரண்டாண்டு பெருமாளோடு கூடித் திருவயோத்தியில் வாழ்ந்தபோது மிதிலைக்கு ஒருநாளும் செல்லவில்லையென்பது *ஸமா: த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே, புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ* என்கிற ஸீதாவசனத்தில் [ஸமா:] என்கிற த்விதீயா பஹுவசனத்தினால் விளங்காநின்றதென்று வியாக்கியானம் செய்தருளுகிறார்கள். *காலாத்வநோ: அத்யந்தஸம்யோகே த்விதீயா* என்பது வியாகரண ஸூத்ரம்; ஸமா:-(ஸமாம் ஸமே ஸமா:) என்று த்விதீயா விபக்தி ரூபம். ஆண்டுக்கு (ஸமா) என்று பெயர். பன்னிரண்டாண்டுகள் இடைவிடாமல் என்றபடி.

204. ***உங்கள் புழைக்கடை*** திருப்பாவையில் அடையாளஞ் சொல்லி யெழுப்புகிற பாசுரங்களில் (14) *உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள், செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பின காண்* என்றொரு அடையாளம் கூறப்பட்டுள்ளது. வாசலில் நின்று துவளுகிற ஆய்ச்சிகள் வீட்டுப் புழைக்கடையிலுள்ள நிகழ்ச்சியைக் கூறுவது எங்ஙனம்? *எங்கும் தோட்டத்து வாவியுள்* என்றன்றோ சொல்லவேண்டும்; *வந்தெங்குங் கோழியழைத்தன காண்* என்றது போல 'எங்கும் செங்கழுநீர் மலர்ந்தன' என்றன்றோ சொல்ல வேண்டும்! என்று சங்கிக்க நேரும். கேண்மின்; இதர மதங்களில் ப்ரமாணங்கள் எட்டென்பார், பதினறென்பாராய்ப் போருவர்கள். நமது பகவத் ராமாநுஜதர்சனத்தில் ப்ரத்யக்ஷம் அநுமானம் சப்தம் என மூன்றே ப்ரமாண மாக அங்கீகரிக்கப்பட்டன. (இதன் விரிவை மணவாளமாமுனிகளின் ஸ்ரீவசன பூஷண வியாக்கியான அவதாரிகையில் கண்டுகொள்வது) இப்பாட்டில் அம் மூன்று வகையான ப்ரமாணங்களும் காட்டப்படுகின்றன. *உங்கள் புழைக்கடை.... கூம்பினகாண்* என்னுமளவால் அநுமானம். *செங்கல்

பொடிக்கூறை... போகின்றுர்* என்பதனுல் ப்ரத்யக்ஷம். *எங்களை முன்ன மெழுப்புவான் **வாய் பேசும்*** என்பதனுல் சப்தப்ரமாணம். ஆக, உங்கள் புழைக்கடையித்யாதியான அடையாளம் அநுமாநஸித்தம் என்றதாயிற்று. *

205. ***உசாத்துணையற்று*** பிள்ளையுலகாசிரியரின் திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் அருளிச் செய்த ஆசார்யஹ்ருதய திவ்யக்ரந்தம் அதி கம்பீரமான சொற்றெடைகளைக் கொண்டு ஒப்புயர்வற்று விளங்குமதென்பது உலகப் பிரசித்தம். அதில் ஒவ்வொரு சூர்ணையும் அற்புத மானது. இங்கு ஒரு சூர்ணையின் அற்புதம் எடுத்துரைக்கப்படுகின்றது. திருவாய்மொழியில் ஆழ்வார் தாமான தன்மையைவிட்டு மகள் பேச்சாகவும் தாய் பேச்சாகவும் தோழி பேச்சாகவும் சில பதிகங்களைப் பாடியிருப்பது ப்ரஸித்தம். அத்தகைய பதிகங்கள் எவையெவை என்பதை யெடுத்துக்காட்ட விரும்பிய ஆசிரியர் அந்தந்தப் பதிகங்களைத்தெரிவிக்கும் வைகரி மிக மிக ஆச்சரிய மானது. ப்ரக்ருதம் தலைமகள் பாசுரமாக அவதரித்துள்ள பதிகங்களைக் காட்டும் (சூர்ணிகையின்) பகுதி கேளீர்; ''புத்ரி பலகால் ஆள்விட்டு ஆற்றுமை சொல்லிக் கவராதவை விட்டு இரைக்க மடலெடுத்துக் கண் புதையப் போக்கற்று உருநெஞ்சுள்ளெழக் கூடுநாள் தேடித் தாழ்த்ததுக் கூடி **உசாத்துணை** யற்றுச் சூழவும் பகை முகஞ் செய்யத் தடைநில்லாதே புயக்கற்று மாலையுங் காலையும் பூவிடுகிற பதினேழில்...''= (இதனைச் சிறிது விவரிக்கிறேன்) மகள் பாசுரமாக வெளிவந்த பதிகங்கள் பதினேழு. அந்தப் பதிகங்களிலுள்ள பிரமேயங்களை வெளியிடும் முகத்தால் அந்தந்தப் பதிகம் நினைவூட்டப்படு கிறதிதில். தலைமகள் தூதுவிட்ட பதிகங்கள் நான்கு; *அஞ்சிறைய மடநாரை.* *வைகல் பூங்கழிவாய் *பொன்னுலகாளீரோ* எங்கானலகங்கழிவாய்* ஆகிய இவையாம். இவற்றை [புத்ரி பலகால் ஆள்விட்டு] என்றதனுல் காட்டியருளினர். (5.) *வாயுந்திரையுகளும் (2-1.) பதிகம். இதில் *எம்மாற்றுமை சொல்லியழுவோமை* என்றதைக் கொண்டு சூர்ணையில் [ஆற்றுமை சொல்லி] என்றது. (6.) *ஏருளுமிறையோனும் (4-8.) பதிகத்தில் *மாருளன் கவராத மணிமாமை குறைவிலமே......உடம்புடையான் கவராத உயிரினுல் குறைவிலமே* என்று பாட்டுத்தோறும் (கவராத) என்று வருவதனுல் அதையிட்டு அப்பதிகத்தை நினைவூட்டுபவராய் 'கவராதவை விட்டு' என்றுர். (7) *மாசறுசோதிப் (5-3.) பதிகத்தில் *நாடுமிரைக்கவே யாமடலூர்ந்தும்* என்று வருவதனுல் அச்சந்தையை நினைவூட்டும் முகத்தால் (அதாவது—இரைக்க மடலெடுத்து என்பதனுல்) *மாசறு சோதிப் பதிகத்தைக் காட்டியருளினர்... *வெள்ளைச்சுரிசங்கு பதிகத்தில் *என்னெஞ்சினுருமங்கே யொழிந்தார், இனி யாரைக் கொண்டென்னுசாகோ * என்று உசாத்துணையான நெஞ்சும் ஒழிந்தமை சொன்னபடியாலே ''உசாத்துணையற்று'' என்கிற சந்தையினுல் அந்த *வெள்ளைச்சுரிசங்கு பதிகத்தைக் காட்டியருளினர். பகவத் கீதையில் *மச்சித்தா மத்கத ப்ராணு: போதயந்த: பரஸ்பரம்* என்று கூறினபடியே பரஸ்பரம் போதநம் பண்ணிப் போது போக்குவதற்குத் துணையாயிருக்குமவர்களை உசாத்துணை யென்பது ஸம்ப்ரதாயம். ஆழ்வார்க்கு வேறு துணைவர் கிடைக்காமல் அவரது நெஞ்சுதான் துணையாயிருந்ததாம். அதையும் இழந்து வருந்துகிறபடியைக் கூறினது *வெள்ளைச்சுரிசங்கு பதிகம். ... ... *

206. ***உச்சிமேல் வைத்துக் கொண்டுகந்தனளால் மலர்க் குழலாள் சீதையுமே.*** பெரியாழ்வார் திருமொழியில் (3-10.) *நெறிந்த கருங் குழல் மடவாய் பதிகமானது அநுமன் (திருவடி) இலங்கையில்

அசோகவனத்தில் சீதா பிராட்டியைக் கண்டு சில அடையாளங்கள் கூறி ராம நாமாங்குளீயகத்தைக் கொடுத்ததாக அமைக்கப்பட்டுள்ளது. அதில் (பா. 8ல்) *அத்தகு சீரயோத்தியர்கோன் அடையாளமிவை மொழிந்தாள், இத்தகையாலடையாளம் ஈதவன்கை மோதிரமே* என்று சொல்லி மோதிரத்தைப் பிராட்டி கையில் கொடுக்க, அதனைப் பெற்றுக் கொண்ட பிராட்டி அதைத் தன் முடி மீது வைத்துக்கொண்டு மகிழ்ந்தபடியைச் சொல்லுகின்ற ஆழ்வார் *ஒக்குமால் அடையாளம் அனுமானென்று உச்சிமேல் வைத்துக்கொண்டு உகந்தனளால்* என்று கூறி உடனே *மலர்க் குழலாள் சீதையுமே* என்கிறார். இங்குப் பிராட்டியை மலர்க்குழலாளாகச் சொல்லுவது தகுமா? இராமபிரானைப் பிரிந்து அல்லும் பகலும் அழுது துடித்துக் கொண்டிருக்கிற பிராட்டி குழலில் பூச்சூடியிருக்கின்றாளென்கை பொருந்துமோ? என்று சங்கை தோன்றக் கூடும். இதற்குக் கேண்மின். **மலர்க் குழலாள் சீதை**யென்றது—அப்போது குழலில் மலர் சூடியிருந்தாளென்கிறதன்று. இஃது இயற்கை யடைமொழி யாம். மலர் சூடியிருக்கத் தகுந்தவள் என்றவாறு. இப்பதிகந்தன்னிலேயே (பா. 2.) *அல்லியம் பூ மலர்க் கோதாய்!* என்று பிராட்டியை (அனுமன்) விளித்திருப்பதுங் காண்க. 'கூந்தலில் மலர் சூடியிருப்பவளே!' என்றுதான் இந்த விளிக்குப் பொருள். ஆனால், இதுவும் அப்போதைய நிலைமையைச் சொல்லுவதன்று; இப்படியிருக்கத் தகுந்தவளே! என்றபடி யென்றுணர்க. *

207. ***உச்சியில் நின்றாடி வாடத் திளைத்தமர் செய்து வருவான்.*** பெரிய திருமொழியில் (3-3-4) கண்ணன் காளியனுச்சியில் நின்று நடமாடிய படியை அநுஸந்திக்கும் பாசுரம். கடம்ப மரத்தில் ஒரு திருவடியும் காளியனுச்சியில் ஒரு திருவடியுமாக நடமாடினபடியால் கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் *காளியஸ்ய பணதாம் சிரஸ் து மே ஸத்கதம்ப சிகரத்வ மேவ வா, வஷ்டி * என்று கோரினார். இங்கு நமது வியாக்கியானம் காண்க.

208. ***உடலம் நீறும்பூசி ஏறூருமிறையோன்.*** பெரிய திருமொழியில் (6-7-9) *ஆறும் பிறையு மரவமும் அடம்புஞ்சடைமேலணிந்து உடலம் நீறும் பூசி யேறூருமிறையோன் * என்று பரமசிவனுடைய திருக்கோலத்தின் வருணனையுள்ளது. அவனுடைய சாபவிமோசன கதையைச் சொல்லுமிடங்களில் *வெந்தாரென்புஞ் சுடுநீறும் மெய்யில்பூசிக் கையகத்து, ஓர் சந்தார்தலை கொண்டு உலகேழுந்திரியும் பெரியோன்* என்று ஆங்காங்கு ஆழ்வார்களருளிச் செய்வது விசித்திரமாயிருக்கும். திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்தில் *காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார் * என்றருளிச் செய்ததன் வியாக்கியானமிவை போலும். ... ... ... ... *

209. ***உடாலி வியாக்கியானம்.*** ஸ்ரீ ராமாயணத்திற்கு கோவிந்தராஜீயம் முதலான வியாக்கியானங்கள் நம்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை முதலான முன்னோர்களின் காலத்திற்குப் பிற்பட்டவை. புராதனமான வியாக்கியானம் **உடாலி**யென்பவர் இயற்றியது. [இது வட நாட்டில் அச்சிடப் பட்டுமுள்ளது.] ஈடுமுப்பத்தாறுயிரப்படியில் (7-5-1.) *நற்பாலயோத்தியில் வாழும் * என்றவிடத்தில் '' [யதோஜாதா—யத:குதச்சிஜ்ஜாதா என்றான் உடாலி '' என்றருளிச் செய்திருப்பது காண்க. இங்கு விஷயமென்னவென்றால், கேண்மின்; இங்கு * **நற்பாலயோத்தி**யென்றது—எவர்க்கும் நல்ல குணத்தையே உண்டாக்கவல்ல அயோத்தியென்றபடி. அப்படியானால் மந்தரையென்னும்

கூனிக்கு ஏன் தீய குணமுண்டாயிற்றென்று கேள்விவர, அவள் அயோத்தி யைச் சேர்ந்தவளல்லள், புறம்போக்குப் பேர்வழி; ஆகவேதான் அவளுக்குக் கடுநெஞ்சு உண்டாயிற்றென்று கூறுகின்ற நம்பிள்ளை அந்த மந்தரையைப்பற்றி ஸ்ரீ ராமாயணத்திலுள்ளதான *ஜ்ஞாதிதாஸீ யதோஜாதா கைகேய்யாஸ் து ஸஹோஷிதா* என்கிற சுலோகத்தைப் பிரமாணமாகக் காட்டியருளி, (யதோஜாதா) என்பதற்குப் பொருள் விளக்கவேண்டி உடாலி வியாக்கி யானத்தை உதாஹரித்தருளினபடி. ... ... ... *

210. ***உடலொடுங்கொண்டு கொடுத்தவன்.*** திருவாய்மொழியில் (3-10-5.) *இடரின்றியே ஒருநாளொருபொழுதில்* என்கிற பாசுரத்தில் *சுடரொளியாய் நின்ற தன்னுடைச்சோதியில் வைதிகன் பிள்ளைகளை, உட லொடுங்கொண்டு கொடுத்தவன்* என்று அநுஸந்தித்தகதை, பெரியாழ்வார் திருமொழியில் (4-8-2) *பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரை யும், இறைப்பொழுதில் கொணர்ந்துகொடுத்து* என்றும், பெரிய திருமொழி யில் (5-8-8) *வேதவாய்மொழியந்தணனொருவன் எந்தை! நின்சரணென் னுடை மனைவி, காதல் மக்களைப் பயத்தலுங்காணாள் கடியதோர் தெய்வங் கொண்டொளிக்குமென்றழைப்ப, ஏதலார்முன்னே யின்னருளவற்குச் செய்து உன் மக்கள் மற்றிவரென்று கொடுத்தாய்* என்றும் விரித்துரைக்கப்பட்டது. இதன் விளக்கமும் அடியேனது திவ்யார்த்த தீபிகையில் காண்க. ... ... *

211. ***உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர்மட மகள் என்றிவர் மூவர்.*** திருவாய்ப்பாடியில் கண்ணபிரானுக்குச் சிறந்த தேவியாக அமைந்த நப்பின்னைப் பிராட்டிக்கு வடமொழித் திருநாமம் **நீளா** என்றுள்ளது. திருப்பாவைத் தனியனருளிச் செய்த பட்டர் *நீளாதுங்க ஸ்தந கிரி தடீஸுப்தம் க்ருஷ்ணம் உத்போத்ய* என்றார். கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்திலே *நீளா குலேந ஸத்ருசீ* என்றார். நப்பின்னைப் பிராட்டியை **நீளா** என்று வ்யபதேசிப்பது எந்த ப்ரமாணத்தை ஆதாரமாகக் கொண்டு! என்று சிலர் கேட்பதுண்டு. ஹரிவம்ச வசனத்தைப் பிரமாணமாகக் காட்டுவது நிற்க. ஆழ்வார்களின் அருளிச் செயல்களே இதற்குப் பிரபலமான ப்ரமாணமாகும். ஸ்ரீ குணரத்ந கோசத்தில் பட்டர் *தேவ்யஸ் ஸஹஸ்ரம் ததா* என்றருளிச் செய்தபடி எம்பெருமானுக்கு ஆயிரக்கணக்கான தேவி மார்கள் இருப்பினும், ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளைத் தலைமைத் தேவி களாகக் கூறுவது பகவச் சாஸ்த்ர ஸித்தம். எம்பெருமானும் கத்யத்திலே அருளிச் செய்வது காணலாம். அத்தேவிமார்களுள் நீளாதேவியைக் குறிக் கின்ற ஆழ்வார்கள் நப்பின்னையாகிய ஆயர் மடமகளையிட்டே குறிக்கின்றனர். *திருமகளும் மண்மகளும் ஆய்மகளும்* என்பது (முதல் திருவந்தாதியில்) பொய்கையார் பாசுரம். நம்மாழ்வார் திருவிருத்தம் தொடங்கும்போதே (3) *குழற் கோவலர்மடப் பாவையும் மண்மகளும் திருவும்* என்றார். இங்குக் *கோவலர் மடப்பாவையென்றது நப்பின்னைப் பிராட்டியையே. திருவாய் மொழியில் *உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகளாயர் மடமகள் என்றிவர் மூவர்* என்றவிடத்து 'ஆயர் மடமகள்' என்றதும் நப்பின்னைப் பிராட்டியையே. திருவாய்மொழியிலேயே (5-6-11) *கூந்தல் மலர் மங்கைக் கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன் தன்னை* என்ற விடத்துக் '**குலவாயர் கொழுந்து**' என்றதும் அப்பிராட்டியையே. இங்ஙனே பல பாசுரங்களுள்ளன. ஆக, ஸ்ரீ பூமிகளோடே நீளாதேவியைச் சொல்லவேண்டு மிடங்களிலே நியமேந நப்பின்னையைக் கூறியிருப்பது குறிக்கொள்ளத் தக்கது. *

212. ***உடனே யுண்பனென்ற வொண்பொருள்.*** * பெரிய திருமொழியில் (5-8) *ஏழையேதலன் பதிகத்தில் பாசுரந்தோறும் ஒவ்வொரு இதிஹாஸ புராணக்கதையை அருளிச்செய்கிறார் திருமங்கையாழ்வார். அவற்றுள் 2, 5, 9 ஆம் பாசுரங்களில் அநுபவித்த கதைகள் அபூர்வமானவை; வேறு எந்த ஆழ்வாராலும் அநுபவிக்கப்படாதவை. இரண்டாம் பாட்டிலநுபவித்த கதை மிகமிக அபூர்வமானது. *வாதமாமகன்மற்கடம் விலங்குமற்றோர் சாதியென்றொழிந்திலை, உகந்து...கோதில் வாய்மையினுயொடுமுடனேயுண்பன் நானென்றவொண்பொருள்* என்பது பாசுரம். ராவண ஸம்ஹாரமாகிப் பெருமாள் அயோத்திக்குத் திரும்புகையில் பரத்வாஜாச்ரமத்தில் அனுமனோடு ஸஹ போஜனம் செய்ததாக இங்குக்கதை. அடியேனுடைய பெரியதிருமொழி திவ்யார்த்த தீபிகையுரையில் விரிவு காண்க. ... ... *

213. ***உடற்பிறவி யான் வேண்டேன்.*** குலசேகராழ்வார் தமது திருமொழியில் (4) *ஊனேறு செல்வப் பதிகத்தில்--திருவேங்கடமலையில் குருகாயும் மீனாயும்...பிறக்க வேணுமென்று தாம் கொண்ட ஆசையைக் கூறியுள்ளார்; அப்பிறவிகளும் உடல்பிறவியாகவேயிருக்க, *உடல்பிறவி யான் வேண்டேன்* என்று முந்துற முன்னம் அருளிச் செய்தது பொருந்துமோ? என்று சிலர் கேட்பதுண்டு. இதற்கு இரு வகையான ஸமாதானம்; (1) திருமலையில் பிறப்பது பிறப்பன்று; அது விரஜா நதியைச் சார்ந்து வைகுண்டத்தில் வாழ்வதொக்கும் என்று கருதினர் என்பதாம். (2) வெறுமனே 'உடல் பிறவி யான் வேண்டேன்' என்னாமல் *ஊனேறு செல்வத்துடற்பிறவி யான் வேண்டேன்* என்றமையால் ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்னத்தில் "தவதாஸ்ய ஸுகைக ஸங்கிநாம்" என்ற ச்லோகத்தில் "இதராவஸதேஷு மாஸ்மபூத் அபி மே ஜந்ம சதுர்முகாத்மநா" என்றது போலே செல்வம் மிக்க பிறப்பு வேண்டா; மிக்க இழிவான பிறப்பாயினும் திருமலையில் பிறக்கவமையும் என்பதாம். *அணையவூரப்புனைய* இத்யாதி ஆசார்யஹ்ருதய சூர்ணை ஸேவிப்பது.

214. ***உடன்மிசையுயிரெனக்கரந்தெங்கும்பரந்துளன்.*** (திருவாய்மொழி 1-1-7.) ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலாயினோர் விசிஷ்டாத்வைத தரிசனத்தைத் தெரிந்துகொண்டது இப்பாசுரங்கொண்டேயாம். நம்முடைய தரிசனத்திற்கு ப்ரதாந ப்ரதிதந்த்ரம் சரீராத்மபாவமேயாம். அதனைத் திடமாகத்தெரிந்துகொண்டவர் எந்த மதாந்தரஸ்தர்களையும் கிள்ளிக்களைந்து விடலாம். வேதாந்தங்களில் 'ஒன்றேதானுள்ளது' என்று பல வாக்கியங்களும் 'பல பொருள்கள் உள்ளன' என்று பல வாக்கியங்களும் கூறுகின்றன. இவை ஒன்றோடொன்று முரண்படுவன போல் தோன்றும். ஒரு முரண்பாடுமில்லை. உண்மையில் பல தத்துவங்கள் இருப்பதனாலே 'பலவுள்ளன' என்பதும் பொருந்தும்; சேதநாசேதநங்களாகிற பல பொருள்களோடு கூடிய பரப்ரஹ்மம் ஒன்றேயாதலால் 'ஒன்றுதானுண்டு' என்பதும் பொருந்தும். இதனை ஒவ்வொருவரும் தம் தம் பக்கலிலேயே பார்க்கலாம். [உடன்மிசைஉயிரென] கண்ணுக்குப் புலப்படுகிற சரீரத்தையும், புலப்படாது உள்ளே மறைந்துறைகின்ற ஆன்மாவையும் சேர்த்துப் பார்த்தால் ஒன்றே; (சாஸ்த்ரத்தைக் கொண்டு) பிரித்துப் பார்த்தால் பலவே. (இங்கு இவ்வளவு சுருக்கம் போதும். மேலே (எ) எழுத்து வரிசையில் விரிவு காணலாம்.)

215. ***உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே.*** திருமழிசையாழ்வார் திருக் குடந்தையருகில் யாத்திரையாக எழுந்தருளியிருந்த காலத்தில் இவரது பெருமையை நன்குணர்ந்த பெரியார்கள் இவரை

அனுவர்த்தித்துக்கொண்டிருந்து, அங்கு அருகிலுள்ள பெரும்புலியூரில் வைதிகோத்தமர்களான அந்தணர்கள் நடத்திக் கொண்டிருந்த ஒரு வேள்வியில் இவரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போய் அக்ர பூஜை செய்விக்க, பண்டு தரும புத்திரருடைய ராஜஸூயயாகத்தில் கண்ணபிரானுக்கு அக்ர தாம்பூலம் ஸமர்ப்பிக்கையில், அது பொருத சிசுபாலன் கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளேவைது அபசாரப் பட்டது போல, இங்கும் பொருமை கொண்ட பல வேதியர்கள் எண்ணிறந்த வசைச் சொற்களைக் கூற, அக்ரபூஜை செய்வித்த பெரியோர்கள் ஆழ்வாரை யணுகி அந்த தூஷகர்களின் செருக்கை அடக்கியருளவேணுமென்று வணங்கிவேண்ட, ஆழ்வார் அவர்களது வேண்டுகோளின்படி செய்தருளக் கருதித் தமக்குள் அந்தர்யாமியான பகவானைக் குறித்துச் *சக்கரங்கொள் கையனே! சடங்கர் வாயடங்கிட, உட் கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே* என்று விண்ணப்பஞ் செய்ய, எம்பெருமான் *தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள் செய்பவராதலால் திருமகளும் நிலமகளும் திருவடி வருடத் திருவனந்தாழ்வான்மீது அறிதுயிலமரும் திருவுருவத்தை இவருடைய திருமேனியிலே தோற்றுவிக்க, அனைவரும் அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்து ஆழ்வாருடைய அபாரமான வைபவத்தையுணர்ந்து அவருடைய திருவடித் தாமரைகளிலே ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து க்ஷாமணஞ் செய்து கொண்டு உய்ந்து போயினர்-என்பது வரலாறு. ... ... ... *

216. ***உட்குடையசுரருயிரெல்லாமுண்ட*** திருவாய்மொழியில் (7-2) *கங்குலும் பகலும் பதிகத்தில் (3) *உட்குடையசுரருயிரெல்லாமுண்ட வொருவனேயென்னு முள்ளுருகும்* என்று திருத்தாயார் பாசுரமாகவுள்ளது. *உட்குடை* என்னு மடைமொழி இங்கு அசுரர்களுக்கு இடப்பட்டிருக்கின்றது. மேலே *ஏழையராவிப் பதிகத்தின் (7-7-11) நிகமனப் பாசுரத்தில் *உட்குடையாயிரத்துள் இவையு மொருபத்தும் வல்லார், உட்குடைவானவரோடுடனாய் என்றும் மாயாரே* என்ற பாசுரத்தில் (உட்குடை) என்னுமடைமொழி திருவாய்மொழிக்கும் வானவர்க்கும் இடப்பட்டிருக்கின்றது. உட்கு என்பதற்கு வல்லமையென்று பொருள். அதாவது சக்தி; இது அவரவர்களின் தன்மைக்குத் தக்கபடியிருக்குமன்றே. திருவாய்மொழிக்குள்ள சக்தியாவது-எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குண விபவைச்வர்யங்களை உள்ளபடியுரைக்கு மாற்றல். அசுரர்க்கும் வானோர்க்குமுள்ள சக்தி ப்ரஸித்தம். *

217. ***உடைகோவணமுண்டு உறங்கப் புறந் திண்ணையுண்டு, அடைகாயிலையுண்டு அருந்தத் தண்ணீருண்டு, சடகோபனீந்த தமிழாயிரமுண்டு தாரணியில், வடகோடுயர்ந் தென்ன தென்கோடு சாய்ந்தென்ன வான் பிறைக்கே.*** (இது மணவாளமாமுனிகளின் விடுதிப் பாடலென்பர்.) இதன் விவரணம் வருமாறு:— சோதிட நூல்களில் *மீனேடு தெற்குயர மற்றெட்டும் வடக்குயர, மானே! கேள் மகர கும்பம் சமமாக, சொன்னபடி சோமனிராவிட்டால், அன்னமரிதாய்விடும்* என்றொரு செய்யுளுண்டு; மீன் ஆடு-மீனமாஸ மேஷமாஸங்களில்-(பங்குனி சித்திரைகளில்;) தெற்கு உயர-இளம்பிறையின் கோடு, தெற்கே உயர்ந்திருக்கவேணும்; மற்றெட்டும் வடக்கு உயர-வைகாசி முதல் மார்கழி வரையில் வடக்கே உயர்ந்திருக்கவேணும்; மகர கும்பம் சமமாக-தை மாசி மாதங்களில் ஏற்றத் தாழ்வின்றியே சமமாகவிருக்கவேணும். இப்படியிருந்தால்

தான் சுபிக்ஷம்; இதற்கு மாறுபாடானால் துர்ப்பிக்ஷம்-என்று கூறியிருப்பது கொண்டு சிலர் ஒருநாளிரவில் இளம்பிறையின்கோடு எங்ஙனமுள்ளதென்று பார்த்திருந்தார்களாம்; அப்போது அன்னவர்களை நோக்கி அருளிச் செய்த தாம்மேலே குறித்த பாசுரம், நமக்கு நித்யஸுபிக்ஷமாயிருக்க, இந்தப் பரீக்ஷை ஏதுக்கு? என்று விநோதமாகவுரைத்தவாறு. ... ... ... *

218. ***உடைந்து நோய்களை யோடுவிக்குமே*** (திருவாய்மொழி. (1-7-11.) ஒவ்வொரு பதிகத்தின் முடிவிலும் பலன் சொல்லித் தலைக்கட்டுகிற ஆழ்வாரின் ஒவ்வொரு பலச்ருதியும் விலக்ஷணமாயிருக்கும். ***பலமத உபபத்தே:*** என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தின்படி பலனளிக்க வல்லவன் எம்பெருமானே யாகிலும் அந்த பல ப்ரதத்வத்தைத் திருவாய்மொழியின் மேலே ஏறிட்டுச் சொல்லுவதுமுண்டு. *காரிமாறன் சடகோபன் சொல்லாயிரத்துளிப்பத்தால், வேரி மாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே* என்றார் ஓரிடத்திலே. *இப் பத்தால் அருளியடிக் கீழிருத்தும் நம்மண்ணல் கரு மாணிக்கமே* என்றார் மற்றோரிடத்திலே. இங்கு, *இப்பத்து உடைந்து நோய்களை யோடுவிக்கும்* என்கிறார். ***நோய்களை**யென்றது-எம்பெருமானையடைவதற்கு விரோதிகளாக உள்ளவற்றையெல்லாம் சொன்னபடி. *ஸர்வதர்மா நித்யாதி சரமச்லோகத்தில் *ஸர்வ பாபேப்ய:* என்றதற்குப் பொருளானவற்றையெல்லாம் சொன்னபடி. இப்பதிகத்தை யநுஸந்திக்கவே, எம்பெருமான் இதனால் ப்ரஸன்னனாகிப் பேறு பெறுவித்தருள்கின்றானென்பது பரமார்த்தம். உடைந்து ஓடுவிக்குமென்றது-உருக்குலைந்து ஓடச் செய்திடும் என்றபடி. பெரியாழ்வார் (5-2.) *நெய்க் குடத்தைப் பற்றிப் பதிகத்திலே "நோய்காள்! காலம் பெற உய்யப் போமின்-இங்குப் புகேல்மின் புகேல்மின்-நடமின்*" என்று கதவடைத்துத் தள்ளினாற்போல் தள்ள வேண்டாமே தாமே நோய்கள் ஓடிப்போய் விடுமென்றது திருவாய்மொழியின் பெருமை சொன்னபடி. ... ... *

219. ***உடையவர் தமக்குமோர் பாகம்*** பெரிய திருமொழியில் (10-9-4) *மல்கிய தோளும் மானுரியதளுமுடையவர் தமக்கும்* என்றும், திருமாலையில் ( ) *உழைக்கன்றே போல நோக்க முடையவர் வலையுள் பட்டு* என்றுமுள்ள பாசுரங்களில் (உடையவர்) என்னுஞ் சொல் வருகிறது. இவ்விடங்களில் (உடையவர்) என்பதற்கு 'உடைத்தானவர்' என்று பொருள். ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் மஹாசார்யராக விளங்கும் எம்பெருமானார்க்கு உடையவர் என்கிற திருநாமம் வழங்குதலால் அவ்வாசிரியரையே இவ்விடங்களில் குறிப்பிடுகிறதென்று கொண்டனர் சிலர். அவர்கள் யாரென்னில், ஆழ்வார்களின் கால ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்கள். அந்தோ! அன்னவர்களின் ஆராய்ச்சிப் புலமையை என் சொல்லுவோம்! "திருமங்கையாழ்வாரும் தொண்டரடிப்பொடியாழ்வாரும் உடையவரைத் தமது நூலில் ப்ரஸ்தாபித்திருக்கையாலே உடையவர் காலத்திற்குப் பிறகே அவ்வாழ்வார்களின் திருவவதாரமென்பது கல்வெட்டு" என்கிறார்கள். மற்றொருவர் எழுதுகிறார் "பெரிய திருமொழியில் (2-6-9ல்) *இணங்கு திருச்சக்கரத்தெம்பெருமானார்க்கிடம்* என்று கூறியிருத்தலால் எம்பெருமானாரென்கிற இராமானுசர்க்குப் பிறகே திருமங்கையாழ்வார் திருவவதாரமென்பது பேர்க்கவும் பேராதது" என்று. இங்ஙனம் கை போனபடியும் மனம் போனபடியும் எழுதுபவர்கள் ஆராய்ச்சிப் புலவர்களாம். இவர்கள் ஒருவரிருவரல்லர். இவர்கள் பரஸ்பரம் தாமே கண்டனம் செய்து கொள்ளுமவர்கள்.

220. * **உடையாயழேலழேல்தாலேலோ** * யசோதைப்பிராட்டி கண்ண பிரானைத் தொட்டிலிட்டுத் தாலாட்டும்போது சொல்லும் பாசுரமிது. பெரியாழ்வார் (1-3. 2.) கண்ணபிரானுடைய அழுகைகள் பலவுண்டு. தொட்டிற் பருவத்தில் அழுத அழுகையைக் காட்டும் பாசுரமிது. * அவ்வ்விடம்புக்குச் செய்யும் நவநீத சௌர்யத்தில் (பெருமாள் திருமொழி (7-8) * முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும்போது * எழில்கொள் தாம்புகொண்டடிப் பதற்கெள்குநிலையும் வெண்டயிர்தோய்ந்தசெவ்வாயும் அழுகையும்...... தொழுகையுமிவை கண்ட வசோதை தொல்லையின்பத்திறுதி கண்டாளே * என்று சொல்லப்பட்ட அழுகையுண்டே, அதுதான் பக்தர்களெல்லாரையும் அழப் பண்ணுமது. ... ... ... ... ... *

221. * **உணங்கல்கெடக்கழுதையுதடாட்டங்கண்டென்பயன்?** * திருவாய்மொழியில் (4 – 6) * தீர்ப்பாரையாமினிப்பதிகம் — ஆழ்வாருடைய தெய்வ நன்னோயின் நலத்தைத் தெரிந்து கொள்ளாதார் சிலர் தேவதாந்தரக் கட்டுவிச்சியை வரவழைத்துச் சில பரிஹாரங்கள் செய்விக்க, அது ஸ்வரூப விருத்தமான செயல் என்பதையுணர்த்தித் தடுக்கின்ற நற்றோழியின் பாசுரமாகச் செல்லுகின்றது இப்பதிகம். அக்கட்டுவிச்சி ஏதோ பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டுமிருப்பது பார்ப்பவர்களுக்குக் கண்காட்சியாயிருந்தபடியால் வேடிக்கை பார்ப்பதுபோல் பார்த்துக்கொண்டு நிற்பவர்களை நோக்கி ஒரு லோகோக்தியை உதாஹரித்துப் பரிஹஸிக்கிறாள் தோழி. [**உணங்கல் கெடக் கழுதையுதடாட்டம் கண்டென்பயன்?**] ஆங்காங்குத் தெருக்களில் உலர்த்தப்படுகிற நெல் முதலான தானியங்களுக்கு உணங்கல் என்று பெயர். அதை அருகேயிருந்து காப்பாரில்லாவிடில் கழுதை மேய்ந்துவிடுவது வழக்கம். அது மேய்கிற போது அதன் உதடு அசைகிற அதிசயம் வேடிக்கைப் பார்ப்பவர்களுக்கு விரும்பிக் காணத்தக்கதாயிருக்கும். ஆனாலும், பொருள் நஷ்டமாவதைக் கண்டு அக்கழுதையை உதைத்துத் துரத்த வேண்டியிருக்க, அது செய்யாதே உதடாடுகிற அதிசயத்தைக் கண்டு கொண்டிருப்பர்கள் அவிவேகிகளான மூர்க்கர்கள். அன்னவர்களை நோக்கி விவேகிகள் கூறுவது உணங்கல் கெட இத்யாதி வாக்கியம். ப்ரக்ருதத்தில். ஆழ்வாருடைய தெய்வ நன்னோய்க்குப் பரிஹாரமாகச் செய்ய வேண்டிய திருநாமஸங்கீர்த்தனம் முதலான நற்செய்திகளைச் செய்யப்பாராதே ஸ்வரூப நாசத்தைக் கணிசியாதே வேடிக்கைப் பார்த்துக்கொண்டிருக்கிறவிது அந்தோ! என்ன அவிவேகம்! என்று பரமைகாந்திகள் க்ஷேபிக்கிறபடி. இத்தால், ஆழ்வார் பரிஸரத்தில் அநீதியான செயல்கள் மெய்யே நடப்பதாகவும் அவற்றைத் தடுப்பதாகவும் பொருள் கொள்ளலாகாது. பரமைகாந்திகளுக்கு இதுதகாது என்று உணர்த்துவதிலே நோக்கென்று கொள்ளவேணுமத்தனை. திருவிருதத்தில் * சின்மொழி நோயோவென்கிற பாசுரமும் * உறுகின்ற கன்மங்கள் மேலன ஓர்ப்பிலராய் * என்கிற பாசுரமும் காணத்தக்கன. ... ... ... ... *

222. * **உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகந்தொறும்.** * [இராமநுச நூற்றந்தாதியில் பா 60.] எம்பெருமானர் எங்கே யெழுந்தருளியிருக்கிறரென்று ஒருவரைக்கேட்டால் ஸ்ரீ பெரும்பூதூரிலென்றும் ஸ்ரீரங்கத்தில் என்றும் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் என்றும் திருவேங்கடமலையில் என்றும் சிலர் கூறுவர்; திருவரங்கத்தமுதனர் இங்குக் கூறுவது அற்புதம்! உண்மையுணர்ந்து கூறுவது இது. மாஞானிகளின் கோஷ்டிகள் எங்கெங்குண்டோ

அங்கங்கெல்லாமிருப்பர்; திருவாய்மொழி ஸேவை எங்கெங்கு நடக்கிறதோ அங்கங்கெல்லாமிருப்பர்; உகந்தருளின நிலங்கள் தோறுமிருப்பர். ஒரு திருமேனியே இத்தனையிடங்களில் எப்படியிருக்க முடியுமென்று சங்கிக்க வேண்டா; ஸௌபரி போலே பல பல வடிவுகள் கொள்வரென்க. ... ... *

223. * **உண்டபோதொருவார்த்தையும் உண்ணாதபோதொரு வார்த்தையுஞ் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே; அவர்கள் பாசுரங்கொண்டன்று இவ்வர்த்தமறுதியிடுவது; அவர்களைச்சிரித்திருப்பார் ஒருவருண்டிறே, அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்தமறுதியிடக்கடவோம்.** * இது ஸ்ரீ வசனபூஷண திவ்யஸூக்தி. பகவானைப்பற்றுவதில் ருசியில்லாதவர்களுக்கு பகவத்விஷய வைலக்ஷண்யத்தை நிரூபித்து அதிலே ருசியையுண்டாக்குவர்கள் நம் ஆசாரியர்கள். அது ப்ரதம பருவமாகையாலே அதிற்காட்டிலும் சிறந்ததான சரமபர்வத்தின் பெருமையை நிரூபித்து அதிலே ருசியையுண்டாக்குவர்கள். இவ்விஷயத்திற்கு ப்ரமாணம் ஸ்ரீ மதுரகவிகளின் ஸ்ரீஸூக்தியேயாகும். மணவாளமாமுனிகள் ஆர்த்திப் பிரபந்தத்தில் * தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம் * என்று தொடங்கும் பாசுரத்தில் * மதுரகவி சொற்படியே நிலையாகப்பெற்றோம் * என்றருளிச் செய்தது காண்க. மேலெடுத்த ஸ்ரீவசனபூஷண சூர்ணையின் கருத்தாவது– * மயர்வற மதிநலமருளப் பெற்றவர்களாய் ப்ரதம பர்வத்திற்காட்டில் சரம பர்வத்துக்குள்ள ஏற்றமெல்லாம் தெளியக்கண்டு பேசினார்களேயாகிலும் சரம பர்வத்தில் (மாத்திரம் ஊன்றினவர்களன்றியே, ப்ரதம பர்வத்திலும் ஊன்றி அதைப் பெற்று அநுபவித்துக்களிக்கும்போது ஒன்றைச் சொல்லுவது அது பெறுமல் வருந்தும்போது ஒன்றைச் சொல்லுவதாய் ஒரு நிலைக்கே நில்லாதவர்களான ஆழ்வார்களுடைய பாசுரங் கொண்டன்று ஆசார்யனே உபாயமென்கிற இவ்வர்த்தத்தை நிச்சயிப்பது; பின்னையார் பாசுரங்கொண்டு நிச்சயிப்பதெனில் — "மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே, தேவுமற்றறியேன்" (கண்ணிநுண்சிறுத்தாம்பு 2) என்று ஸ்வாசார்யரான நம்மாழ்வாருடைய திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமாகப்பற்றி வேறொரு தெய்வமறியாதவராய் ஒரே நிலையில் நின்று, ஆழ்வார்களுடைய படிகளைப்பார்த்து "இவர்களென் இப்படி ப்ரதம பர்வத்திலும் சரம பர்வத்திலும் தோள்மாறுகின்றனர்" என்று அவர்களை பரிஹஸித்திருக்கும் ஸ்ரீ மதுர கவியாழ்வாருடைய பாசுரமான கண்ணிநுண் சிறுத்தாம்பைக்கொண்டு இவ்வர்த்தத்தை நிச்சயிக்கக்கடவோம் என்றவாறு. இத்தால், ஆழ்வார்களுக்கு ஒரு குறைகூறினபடியன்று. ஸ்ரீ மதுரகவிகளின் அத்யவஸாயத்தினுறுதியை யுணர்த்தியவாறு. ப்ரதம பர்வ நிஷ்டை வாய்ப்பது எளிது; சரம பர்வ நிஷ்டை வாய்ப்பது மிகவுமரிது என்க. *

224. * **உண்டாயுலகேழ்முன்னமே** * திருவாய்மொழியில் (1-5) * வளவேழுலகு பதிகம் தனிப்பட்ட பெருமை வாய்ந்தது. இப்பதிகத்தின் தாற்பரியத்தை மணவாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் * வளமிக்கமால் பெருமை மன்னுயிரின் தண்மை உளமுற்றங்கூடுருவவோர்ந்து- தளர்வுற்று, நீங்க நினைமாறனைமால் நீடிலகு சீலத்தால், பாங்குடனே சேர்த்தான் பரிந்து* என்னும் பாசுரத்தினல் விளக்கியருளினர். ஆழ்வார் நைச்யாநுஸந்தானம் பண்ணி எம்பெருமானிடத்தில் நின்றும் அகலப்பார்ப்பதும் எம்பெருமான் அவரைச்சேர்த்துக் கொள்ளப் பார்ப்பதும் மிக விநோதமானது

அதில் எட்டாவது பாசுரம் *உண்டாயுலகேழ் முன்னமே உமிழ்ந்து மாயையால் புக்கு உண்டாய் வெண்ணெய் சிறுமனிசர் உவலையாக்கை நிலையெய்தி மாண்டான் சோர்ந்ததுண்டேலும் மனிசர்க்காகும் பீர் சிறிது மண்டாவண்ணம் மண்கரைய நெய்யூண் மருந்தோ மாயோனே* என்பது. இப்பாட்டின் ஸந்நிவேசத்தை ஊன்றிநோக்குமிடத்து எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் விநோதமானவொரு ஸம்வாதம் நிகழ்ந்தமை நன்கு புலப்படும். கீழ்ப்பாட்டில் எல்லை கடந்த நைச்சியாநுஸந்தானம் பண்ணிப் பின்வாங்கின ஆழ்வாரை எம்பெருமான் நல்லதோருபாயத்தினால் தன்னோடு பொருந்தவிட்டுக் கொள்ள வேணுமென்று பார்த்து அவரோடே பேசத்தொடங்கினான்; 'வாரீர் ஆழ்வீர்! என்னுடைய செயல்களெல்லாம் உமக்கு நன்றாய்த் தெரியுமன்றோ? என்றார். அவற்றை எம்பெருமான் வாய்கொண்டே கேட்கவேணுமென்னும்' விருப்பமுடைய ஆழ்வார் 'உன்னுடைய செயல் எனக்கு ஒன்றும் தெரியாது என்றார். எம்பெருமான்:—இப்படி நீர் சொல்வது மெய்தானா? இப்படியும் பொய் சொல்லலாமா? இப்போது கேட்கிறேன் சொல்லும்; நான் ஒரு காலத்திலே உலகங்களெல்லாவற்றையுமெடுத்து வயிற்றினுள்ளே அடக்கி வைத்துப் பிறகு வெளிப்படுத்தினேனென்பதும் திருவாய்ப்பாடியிலே புக்கு வெண்ணெய் விழுங்கினேனென்பதும் உமது காதில் விழுந்ததில்லையா? உண்மையாகச் சொல்லும். ஆழ்வார்:-ஆம்; கேட்டிருப்பதுண்டு; "நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும், தளிரொளி யிமையவர் தலைவனுமுதலா, யாவகையுலகமும் யாவருமகப்பட, நிலநீர் தீ கால் சுடரிரு விசும்பும், மலர் சுடர் பிறவுஞ் சிறிதுடன் மயங்க, ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவதுமகப்படக் கரந்து ஓராலிலைச்சேர்ந்த எம்பெருமா மாயனையல்லது, ஒரு மா தெய்வம் மாற்றுடையமோ யாமே" என்றும், "மத்துறுகடை வெண்ணெய் களவினில் உரலிடையாப்புண்டு" என்றும் அடியேனே சொல்லியுமிருக்கிறேனே. எம்பெருமான்:-ஆழ்வீர்! இவ்விரண்டு காரியமும் நான் எதற்காகச் செய்தேன்? தெரியுமா? உலகங்களை உண்டுமிழ்ந்து வெண்ணெயுண்டது எதற்காக ஆராய்ந்து சொல்லும் பார்ப்போம் ஆழ்வார்:-உன்னுடைய காரியங்களுக்கெல்லாம் காரண மறிவாரார்? ஏதோ உன் திருவுள்ளத்தில் தோன்றின காரியங்களையெல்லாம் நீ செய்துகொண்டிருக்கிறாய்; எனக்கொன்றும் காரணந் தெரியாது. எம்பெருமான்:-உமக்குத் தெரியாதாகில் நான் சொல்லக் கேட்கலாமன்றோ? சொல்லுகிறேன், கேளும். பிரளயங்கொள்ளாதபடி உலகங்களை வயிற்றிலடக்கி நோக்கினேன்; பிரளயம் நீங்கினவாறே அவ்வுலகங்களை வெளிப்படுத்தினேன்; உள்ளடக்கியிருந்த வுலகங்களில், வெளிப்படாமல் உள்ளேயே மிச்சமாய் நின்றுவிட்டது. ஏதேனுமிருந்தாலும் இருக்கக்கூடும்; அந்த மண்ணும் கரைந்து வெளிவந்துவிடட்டுமென்றே திருவாய்ப்பாடியில் வெண்ணெயும் நெய்யுமுண்டேன் காணும். ஆழ்வார்:-இது யாரை மயக்குகிற வார்த்தை? உலகமுண்டுமிழ்ந்து எப்போதே போயிற்று; வெண்ணெயுண்டது மற்றெப்போதோ ஆயிற்று? அதற்கும் இதற்கும் என்ன ஸம்பந்தம்? திண்ணைக்குத் தேள் கொட்டத் தீர்த்த மிடாவுக்கு நெறி கட்டிற்று என்னுமாபோலே நல்ல கார்ய காரண பாவஞ்சொல்லுகிறாய் பிரானே! எம்பெருமான்:-'நான் வெண்ணெயுண்டதற்கு என்ன காரணமிருக்கும், நீர் சொல்லும்' என்றால் எனக்குத் தெரியாதென்கிறீர்; உள்ள காரணத்தை நானே சொன்னாலும் இது அஸம்பாவிதமென்கிறீர். நான் சொல்லுகிற காரணம் தவறாக இருந்தால் நீர் தாம் ஆலோசித்து ஒரு காரணம் சொல்லும். ஆழ்வார்;—ஆச்ரிதர்களின் ஸம்பந்தம் பெற்ற வஸ்துவே உனக்குத் தாரகமாதலால் வெண்ணெயுண்டா

யத்தனே; இதுதான் காரணம்; வேறு காரணம் பரிஹாஸ்யம். எம்பெருமான் :- ஆழ்வீர்! ஆச்ரிதர்களின் வஸ்துவே நமக்குத் தாரகமென்பதை நீர் நன்கு அறிந்திருக்கிறீரன்றோ? உம்முடைய உடலும் எனக்கு அந்த வெண்ணெய் போன்றதே காணும்; இதுவே எனக்குத் தாரகங்காணும்; ஆன பின்பு நீர் உரிமைக்கொண்டு அகல்வீராகில் திருவாய்ப்பாடியில் வெண்ணெயூண் விலக்கினர் புக்க லோகம் புகுவீரத்தனே; இனி நம்மை அணுகப் பாரும். இங்ஙனம் எம்பெருமான் சோதி வாய் திறந்து சொல்லிவிட்டபின்பு மேலே ஒன்றும் வாய் திறக்க வழியில்லாத ஆழ்வார் எம்பெருமானது கருத்தைத் தாம் அறிந்தமை தோற்றவும் மேலே காட்டின ஸம்வாதம் வெளிப்படவும் பாங்காக இப்பாசுர மருளிச்செய்கிற அழகு பாரீர். இவ்வளவு ஆழ்ந்த கருத்தை அழகாகக் கண்டுபிடித்து வியாக்கியானங்கள் அமைத்தருளின பூருவாசாரியர் களின் மதிக்கு மண் விண்ணெல்லாங் கூடியும் விலை போகுமோ? ... ... *

225. ***உண்டிட்டாய் இனியுண்டொழியாய்.*** (திருவாய்மொழி. 10-10-6.) *எனக்காராவமுதாயெனதாவியை யின்னுயிரை, மனக்காராமை மன்னி உண்டிட்டாய் இனியுண்டொழியாய்* என்கிற பாசுரம் ஈடுமெடுப்பு மில்லாதது. ஆழ்வார் எம்பெருமானோடே கலந்து பரிமாறும்போது அப் பெருமான் ஆழ்வாருடைய திருமேனியிலே காட்டும் அபிநிவேசம் வாசாம கோசரம். கீழே (5-5-10) *சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு என்னெஞ்சுள்ளெழும் ஆர்க்குமறிவரிதே* என்றார். அது பெரிதன்று. (9-6-5ல்) *திருவருள் செய்பவன்போல என்னுள் புகுந்து, உருவமுமாருயிரு முடனே யுண்டான்* என்றார். ஆழ்வார் பிரபந்தம் தொடங்கும்போதே முதலடியிலேதானே தம்முடைய திருமேனியை **அழுக்குடம்** என்றார். இது எம் பெருமானுக்கு அஸஹ்யமாயிருந்தது. பலாப்பழத்தை வேப்பங்கா யென்பாரைப் போலே நமக்குப் பரமபோக்யமான திருமேனியை அழுக்குடம் பென்கிறாரே! இது என்ன மருள்! என்று வருந்தியிருந்து அந்தத் திரு மேனியை அடுத்தடுத்து புஜிக்கத்தொடங்கினன். அதை ஆழ்வார் ஸங்கோ சத்தாலே மறைத்திடாமல் *யானொட்டியென்னுள் முதலான பாசுரங்களாலே வெளிப்படையாகவே விளம்பிவந்தார் இப்போது முடிவாக *உண்டிட்டாய் இனியுண்டொழியாய்* என்று சொல்லுமழகு வேறு எந்த ஆழ்வாராலும் அநுகரிக்கவும் முடியாது. பாசுரத்தைச் சிறிது விவரிக்கிறேன்; **[எனக்காராவமுதாய்]** தேவர்கள் உண்ணும் உப்புசாறு போலன்று ஆழ்வாருடைய ஆராவமுதம். *எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதமே* என்னும்படியான அம்ருதமன்றோ. **[எனதாவியை இன் னுயிரை மனக்காராமை மன்னியுண்டிட்டாய்]** இங்கு ஆவியென்று உடலைச் சொல்லு கிறது. *ஆத்மா ஜீவே த்ருதௌ தேஹே ஸ்வபாவே பரமாத்மநி* என்ற நிகண்டின்படி வடமொழியில் ஜீவாத்ம வாசகமாக ப்ரஸித்தமான 'ஆத்மா' என்னுஞ் சொல் தேஹத்துக்கும் வாசகமாமாப்போலே இங்கு **ஆவி**யென்கிற சொல் உடலுக்கு வாசகமாகக் குறையில்லை. என்னுடலையும் என்னுயிரையும் எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்தி பிறவாமே உண்டிட்டாய்; அதிலே சேஷம் வைப்பது ஏதுக்கு? நீ எச்சில் பண்ணினதை இன்னொருவர் உண்பரோ? முற்றவும் நீயே உண்டொழியப்பா! என்கிறார். 'இனி உண்டருளே' என்று மரியாதையாகச் சொல்லாமல் **உண்டொழியா**யென்றது ஆழ்வாருடைய எல்லை கடந்த ஆர்த்தியைக் காட்டும். ஒரு தேவாலயத்தில் பெருமாளுடைய நிவேதனத்திற்காகத் திருமடைப்பள்ளியில் பக்ஷ்யவர்க்கம் சமைந்தது; பெரு

மாளுக்கு நிவேதனமாவதற்குமுன்னமே அதையெடுத்துச் சமையல்காரன் உண்டுகொண்டிருந்தான்; ஆலயாதிகாரி அதைக் கண்டுகொண்டே வந்துவிட அவனே திகைத்து நிற்கிறன். இவர் தாம் என்ன செய்வர் பாவம்! 'உண்டிட்டாய் இனியுண்டொழியாய்' என்பரத்தனே. பயலே! நீ உண்ட எச்சில் பெருமாளுக்குமாகாது; பக்தர்களுக்குமாகாது; முழுதும் நீயேதான் உண்ணவேணும்; உண்டு தொலை என்று சொல்லிப் போய்விட்டாராம். எம்பெருமானுண்டிட்ட ஆழ்வாருடைய திருமேனி இனி அந்ய சேஷப்படாது, ததேக சேஷம், ததேக போக்யம்--என்பது இங்கு உள்ளுறை. ... ... *

226. * **உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலம்.** * இந் நிலவுலகத்திற்கு நம்மாழ்வார் * இருள் தருமா ஞாலமென்று பெயரிட்டார்; குலசேகராழ்வார் * உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலம் * என்று பெயரிட்டார்; இது மிகப் பொருந்தமானது. ஒரு யோஜனை தூரத்திற்கப்பால் ததீயாராதனை நடக்கிறதென்றாலும், ஒரு தனிகர் வஸ்த்ரதானம் செய்கிறரென்றாலும் சிரமம் பாராமல் நடந்தோடிச் செல்வோர்; மிகவருகே ஒரு பெரிய திருவடியுத்ஸவமென்றாலும் ஒரு ஸத்கதாகாலக்ஷேபமென்றாலும் இடம் விட்டுப் பெயரமாட்டோர்; இஃது எங்கும் கட்கூடாகக் காண்பதுதானே. (பெருமாள் திருமொழியில் (3-4.) பாசுரமிது. இத்தகைய ப்ராக்ருதர்களோடு தாம் கூடமாட்டாமை கூறுகின்றார் குலசேகராழ்வார். *மெய்யில் வாழ்க்கைப்பதிகத்தில் ஒவ்வொரு பாசுரத்திலும் இம்மண்ணுலகத்தவரின் பான்மையை ஒவ்வொரு விதமாகச்சொல்லி இவர்களோடு நான் கூடமாட்டேனென்கிறாராழ்வார். திருவாய்மொழியில் (10-6-2) *நட்டாரோடியல் வொழிந்து நாரணனை நண்ணினமே * என்று நம்மாழ்வாருளிச் செய்ததை ஒரு பதிகத்தினால் விவரித்தருளினரென்க. ... ... *

227. * **உண்டியுராக்கிடக்கும்போதுமுடலுக்கே கரைந்து நைந்து.** * (திருமாலை-5.) * தண்டுழாய்மாலைமார்பன் தமர்களாய்ப்பாடியாடித்தொண்டு பூண்டமுதமுண்ணுத் தொழும்பரை நிந்திக்கின்ற தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச்செயல் இது. பகலெல்லாம் வயிறு வளர்க்கத்திரிந்து எம்பெருமானைச் சிறிது சிந்திக்கவும் அவகாசம் பெறாதவர்கள் இரவில் அடங்கியொடுங்கிக் கிடக்கும்போதாவது அப்பரமனைச் சிறிது சிந்திக்கலாமே, அந்தோ! அக்கேடு மில்லையே! என்று நம்போல்வார் நிலைமையை நினைந்து நைகின்றாராழ்வார். *

228. * **உண்ணுஞ்சோறு பருகுநீர் ... எல்லாம் கண்ணன்.** * இப் பதிகம் (திருவாய்மொழி 6-7) தாய் பாசுரமாக அவதரித்தது. தாய் பாசுரமாக வைத்துப் பேசுபவர் ஆழ்வாரேயாதலால் தம்முடைய படியைத்தாமே தெரிவிப்பதாகும். ஆசார்யஹ்ருதயத்தில் வ்யாஸ பராசராதி மஹர்ஷிகளுக்கும் ஆழ்வார்க்குமுள்ள வாசியை விரிவாக அருளிச்செய்து வருமிடத்து "அவர்களுக்குக் காயோடென்னுமிவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாம் கண்ணனிறே" என்றருளிச்செய்த சூர்ணையை உரையுடன் இங்கு அநுபவிப்பது. இங்கே ஆக்ஷேப ஸமாதானம் குறிக்கொள்ளத்தக்கது. உண்ணாத சோறுமுண்டோ? பருகாத நீருமுண்டோ? தின்னாத வெற்றிலையுமுண்டோ? எதற்காக இந்த அடைமொழிகள் கொடுப்பது? பாதபூரணத்திற்காகவா? என்று சிலர் கேட்கலாம். வ்யாக்யானத்திலுள்ள அழகைக் காட்டுகின்றோம். சோறு எப்போதும் உண்ணுஞ்சோறாகவிராது. வயிறு நிறைய உண்டவனுக்கு

தேவாம்ருதம் கிடைத்தாலும் அது உபேக்ஷணீயமாகவே யிருக்கும். கங்கைக் கரையிலுள்ளவனுக்குக் குளத்துநீர் அநபேக்ஷிதமாயிருக்கும். வாய்நிறைய வெற்றிலையைக் குதப்பியுள்ளவனுக்கு வேறு வெற்றிலை தின்னும் வெற்றிலையாக இராது. ஆகவே ''உண்ணுஞ்சோறு'' என்றது பசித்தவன் விரும்பியுண்ணுஞ் சோறு என்றபடி. 'பருகும்நீர் என்றது பாலைவனத்தில் திரிந்து நாக்கு ஒட்டிப் போனவன் விரும்பிப் பருகும்நீர், என்றபடி. 'தின்னும் வெற்றிலை' என்றது நாவில் பசையற்று வறண்டு கிடப்பவன் விரும்பித் தின்னும் வெற்றிலை என்றபடி. ஆழ்வார் எம்பெருமானை அநுபவிப்பது இவ்வகையிலேயாம்.

229. *உதவிக்கைம்மாறு.* திருவாய்மொழி (7-9-10) உலகில் குணங்களிற் சிறந்தது எது? குணக்கேடுகளில் தலையானது எது? என்று ஒரு கேள்வி. குணங்களில் தலையானது நன்றி மறவாமை; குணக்கேடுகளில் தலையானது நன்றி மறத்தல் அதற்கு எதிரானது. நன்றி மறவாமைக்கு அடையாளம் யாதெனில், நன்றி பெற்றவிடத்தில் கைம்மாறு செய்தலாம். இது மானிடர்க்குப் பரஸ்பரம் உரியது. எம்பெருமான் நமக்குச் செய்யும் நன்மைகளுக்கோ அளவில்லை; அதற்காக நாம் நன்றிகுன்றுமலிருக்கலாமேயொழிய அவனுக்கு நாம் செய்யக்கூடிய கைம்மாறு ஒன்றுமில்லை என்ன கைம்மாறு செய்வேன்! என்று உபசாரமொழிகளைச் சொல்லிக்கொண்டிருக்கலாம். *தலையல்லால் கைம்மாறிலேனே* என்று சொல்லலாம். எம்பெருமானுக்கு ஏதேனும் ஆக வேண்டியதிருந்தால் அதைச்செய்து கொடுத்து 'நாமும் கைம்மாறு செய்தோம்' என்று அபிமானிக்கலாம். அவனே அவாப்தஸமஸ்தகாமன். ஸர்வாத்மநா நிரபேக்ஷன். அவனுக்கு நாம் எதைச்செய்து கொடுப்பது? எதுவுமில்லை இந்த பரமார்த்தம் ஆழ்வார்க்கு நன்கு தெரிந்திருந்தும் எம்பெருமானுக்கு ஏதேனும் கைம்மாறு செய்யவேணுமென்று தோன்றிற்று. (திருவாய்மொழி-இரண்டாம் பத்தில்) *எனதாவியுள் கலந்த பெரு நல்லுதவிக் கைம்மாறு, எனதாவி தந்தொழிந்தேன்* என்றார். உலகில் கைம்மாறு செய்வதென்பது தனக்குச் சொந்தமானதொரு பொருளைக் கொடுப்பதன்றோ, *எனதாவி தந்தொழிந்தேன்* என்றது தகுதியற்ற வார்த்தையன்றோ. அவனதல்லாததொரு பொருளில்லையே. 'எனதாவி' என்று சொல்வது அபசாரமன்றோ. இதனை ஆராய்ந்து உணரப்பெற்ற ஆழ்வார் உடனே *எனதாவி யார்யானார் தந்த நீ கொண்டாக்கினையே* என்று முடித்துக்கொண்டார். மீண்டும் வானமாமலைப் பதிகத்தில் (5-7-10) *ஆறெபுனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய், உனக்கோர் கைம்மாறு* என்று தொடங்கினார். உடனே விவேகம் தலையெடுத்து *நானொன்றிலே எனதாவியுமுனதே* என்று தலைக்கட்டினார். மறுபடியும் ஏழாம் பத்தில் அந்த சித்தப்ரமம் தலையெடுத்து, என்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்த பெருமானுக்கு ஏதேனும் கைம்மாறு செய்தாகவேணுமேயென்றுநினைத்து *உதவிக் கைம்மாறு என்னுயிர்* என்றதும் விவேகித்து *என்னுயிரென்னவுற்றெண்ணில் அதுவுமற்றங்கவன் தன்னது. என்னால் தன்னைப் பதவிய இன்கவி பாடியவப்பனுக்கு எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே* என்று தலைக்கட்டினார். ஆனால் இந்த சித்தப்ரமம் ஆழ்வார்க்கு இவ்வளவோடு முடிந்தபாடில்லை; மேல் எட்டாம் பத்தின் முதற் பதிகத்திலும் தலையெடுத்து* (8-1-10) *தாள்களையெனக்கே தலைத்தலைச்சிறப்பத் தந்த பேருதவிக் கைம்மாறு, தோள்களை யாரத்தழுவியென்னுரை அறவிலை செய்தனன் சோதீ!* என்று சொல்லிக் கைம்மாறு செய்தே தலைக்கட்டினார். ... ... ... ... *

230. * உந்துமதகளிற்றனோடாததோள்வலியன் * திருப்பாவையில் (18) நப்பின்னைப்பிராட்டியைத் திருப்பள்ளியுணர்த்தும் பாசுரமிது. நப்பின்னையைக் 'கும்பர் மகளே!' என்றழையாமல் நந்தகோபாலன் மருமகளே!' என்று விளித்தது அவளுடைய திருவுள்ளவுகப்புக்காக. ''இராமமைபெய்த வீரவீரத்துள், பனைநுகங்கொண்டு யானை ஏர்பூட்டி, வெள்ளி விதைத்துப் பொன்னே விளையினும், வேண்டேன் பிறந்தகத் தீண்டிய வாழ்வே'' என்று பிறந்தகத்துச் செல்வத்தை வெறுத்து, ''செங்கேழ்வரகுப் பசுங்கதிர் கொய்து, கன்று காத்துக் குன்றிலுணக்கி, ஊடுபதர் போக்கி முன்னுதவினோர்க்குதவிக், காடுகழியிந்தனம் பாடுபார்த்தெடுத்து, குப்பைக்கீரை உப்பின்றி வெந்ததை, இரவல் தாலம் பரிவுடன் வாங்கிச், சோறதுகொண்டே பீறலடைத்து, ஒன்றுவிட்டொருநாள் தின்று கிடப்பினும், நன்றே தோழி! நங்கணவன் வாழ்வே'' என்று புக்ககத்தின் தாரித்ரியத்தை மெச்சுங் குலமகட்குப் பிறந்தகத்துச் சம்பந்தத்தையிட்டு விளிப்பது ருசிக்கமாட்டாதன்றோ. ஆகவே இதுதான் ஏற்றவிளி. திருப்பாவையில் நந்தகோபாலன் விளி ஐந்திடங்களில் வருகின்றது. 1, 16, 17, 18, 21 ஆம் பாசுரங்களில் காண்க. முதற்பாட்டில் * கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் * என்று அவனுடைய மங்களாசாஸனபரத்வம் சொல்லிற்று 16 - ல் * நாயகனாய் நின்ற நந்தகோபனென்று அவனுடைய தலைமை சொல்லிற்று. 17 - ல் * அம்பரமே தண்ணீரே சோறேயறஞ்செய்யுமெம்பெருமான் நந்தகோபாலனென்று அவனுடைய ஔதார்யம் சொல்லிற்று. 21 - ல் * ஏற்றகலங்கள்......வள்ளல்பெரும் பசுக்களாற்றப் படைத்தானென்று அவனுடைய பசுஸம்ருத்தி பாக்கியம் சொல்லிற்று. 18. * உந்துமதகளிற்றன் பாசுரத்தில் அவனுடைய பராக்ரமத்தின் வீறு சொல்லுகிறது. உண்மையில் அவனுக்கு இவ்வளவு பராக்ரமமுண்டா? என்று சங்கிக்க நேரும்; கேண்மின். வேதத்தில் பகவானைப்பற்றி * ஆத்மதா: பலதா: * [நாலாவது காண்டம் — முதல் ப்ரச்நம்; ஏழாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நம்.] என்று சொல்லிற்று. பகவான் தன்னையநுபவிக்கக் கொடுப்பன், அநுபவிக்கைக்கீடான வலிமையையும் கொடுப்பன் என்பது அந்த வேதவாக்கியத்தின் பொருள். ''மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்'' என்ற யசோதைப் பிராட்டியைப் போலன்றியே மிடுக்குடையவன் நந்தகோபன் என்கிறது. ... ... ... *

231. உபந்யாஸகஸௌபாக்யம். [இடையில் அடியேனுடைய விண்ணப்பம்] இந்த திவ்யப்ரபந்த மஹாநிதியில் * உபந்யாஸகஸௌபாக்ய மென்கிற இந்த மகுடம் புகுவதற்கு ப்ரஸக்தியில்லை. ஆனாலும் ப்ராஸங்கிகமாக ஒரு விண்ணப்பம் செய்ய வேண்டியதற்காக இந்த மகுடமிட்டுக்கொண்டேன். அடியேனுடைய நூல்களில் **உபந்யாஸகஸௌபாக்யம்** என்னும் தலைப்புடன் பலநூல்கள் வெளிவந்திருப்பதை உலகமறியும். அவை வெளியிடத் தொடங்கிப் பதினைந்து வருடங்களாயின. அந்த வகுப்பில் முதன்முதலாக வெளியிட்ட நூல் சாடுச்லோக சதகமென்பது (1960ல் வெளியிடப்பட்டது.) அதில் அப்போது அடியேன் வெளியிட்ட முன்னுரையாவது :—

[இதனுடைய தொடர்ச்சி பின்பக்கம் பார்க்க.]

"விஹாரி-ஸூ புரட்டாசித் திங்கள் விஜயதசமியாகிய இன்று (12-10-59,) உலகுக்கு மஹோபகாரமாகவொரு பெரியகாரியம் அல்லது சிறியகாரியம் செய்யவேணுமென்று அபிலாஷை தோன்றியது. திருமலையில் லோகோத்தரமாக நடைபெறும் திருவேங்கடமுடையான் ப்ரஹ்மோத்ஸவத்தை இரண்டொரு நாளாவது ஸேவித்து வருவோமென்று முந்தாநாள் விடைகொண்டு இரண்டு நாட்களிருந்து அற்புதமாகஸேவித்துக்கொண்டிருக்கையில் அங்குச்சில ஸஹ்ருதயஸுஹ்ருந்மணிகளோடு வார்த்தையாடாநிற்க, ஒரு மஹான் "உம்முடைய நூல்கள் பல எனக்குக் கிடைத்திருக்கின்றன. அவற்றுக்கு **உபந்யாஸக ஸௌபாக்யம்** என்று பெயர் வைத்திருக்கலாமே" என்றார். இதைத் தாமே விவரித்தும் சொன்னார்—பக்தாம்ருதம், பன்னிருதிங்களநுபவம், விசேஷார்த்த ரத்ன நிதி, அறுபத்திரண்டு உபந்யாஸமாலை, அறுபத்துமூன்று உபந்யாஸ மாலை, அறுபத்து நான்கு உபந்யாஸ மாலை ... என்று இப்பேர்ப்பட்ட உம்முடைய நூல்கள் ஆங்காங்கு உபந்யாஸங்கள் செய்பவர்களுடைய பாக்யமே வடிவெடுத்ததாகக் காண்கையாலே உபந்யாஸக ஸௌபாக்ய மென்றே இவற்றுக்குப் பெயர் வைக்கலாமேயென்று விஜ்ஞாபித்துக் கொண்டபடி என்றார். அவ்வளவோடும் நிற்காமல் இப்போது திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்ததற்கு ஞாபக சின்னமாக உபந்யாஸக ஸௌபாக்யமென்றே பெயரிட்டு ஒரு சிறந்த புத்தகம் வெளியிடுமென்றும் நியமித்தார். திருத்தேரிலெழுந்தருளாநின்ற திருவேங்கடமுடையானை ஸேவித்துக் கொண்டிருக்கும்போது கிடைத்த இந்த பாகவத நியமனத்தைத் திருமலையப்பனுடைய திருவாணையாகவே கொண்டு, திருமலையில் நின்று விடைகொண்டதும், விஜயதசமியன்று ப்ரபாதத்தில் இந்தச் சிறு நூலை சேகரிக்கத் தொடங்குகின்றேன். உபந்யாஸங்களில் இடையிடையே சாடுச்லோகங்களைச் சொல்லி ச்ரோதாக்களை ரஸிப்பிக்க வேண்டியது அவசியமாகிறதன்றோ. அதற்கு இச்சிறுநூல் உதவியாகுகவென்று ஸங்கல்பித்து இதனைச் சேகரித்து வெளியிட முன்வந்தேன். இந்த சாடுச்லோகங்கள் பெரும்பாலும் இளமையில் திருத்தகப்பனார் பயில்வித்தவை. குவலயானந்தம் முதலிய நூல்களிலிருந்தும் கொள்ளப்பட்டவை. அனைவர்க்கும் பயன்படுமாறு தமிழுரையுடனும் இதனை வெளியிடுகிறேன்."

அந்நாள் தொடங்கிஇன்றளவும் உபந்யாஸக ஸௌபாக்ய மகுடம் புனைந்த நூல்கள் பல வெளியிட்டிருக்கிறேன். [இப்போது பிரதிகள் கிடைக்கமாட்டா; பெரும்பாலும் செலவாகிவிட்டன.] இந்த மஹாநிதிக்கு நாம் அங்ஙனே மகுடமிடாவிட்டாலும் அந்த மகுடத்திற்கு உரியதேயாமிது என்று பல ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகள் தெரிவித்து வருகிறார்கள். ஆங்காங்கு நெடுநாளாகவே உபந்யாஸங்கள் செய்து உலகம் போற்ற நிற்கும் மஹநீயர்கள் இதுகொண்டே உபந்யஸிக்க வேணுமென்பது கருத்தன்று; புதிதாக உபந்யாஸம் செய்ய விரும்பித் தொடங்குமவர்களுக்கு மஹோபகாரமாகவேணு மென்று கருதியே எழுதிவருவதாமிது. ... ... ... ... *

232. * **உபயவேதாந்தம்.** * வடமொழிவேதாந்தமும் தென்மொழிவேதாந்தமுமாகிய இரண்டு வேதாந்தங்களையுஞ் சேர்த்து உபயவேதாந்தமென்று வழங்குவர். இது உண்மையான பொருள். இது நிற்க, வேறொரு பொருளை ரஸோக்தியாக நாம் உபந்யஸிப்பதுண்டு. (அதாவது) பய வேதாந்தமும் அபய வேதாந்தமும் சேர்ந்து உபயவேதாந்தமாயிற்று — என்று. வடமொழிவேதாந்தம் — பயவேதாந்தம்; தென்மொழி வேதாந்தம் — அபய வேதாந்தம். எங்ஙனேயென்னில்; உலகில் பொதுவாக எல்லார்க்கும் உஜ்ஜீவிக்கும் வழி தெரிந்து கொள்வதில் ஆசையுண்டாவது இயல்பு. வடமொழி வேதாந்தம் தெரிவித்த உஜ்ஜீவநோபாயமானது பயப்படும்படியாகவுள்ளது. தென்மொழி வேதாந்தம் தெரிவித்த உஜ்ஜீவநோபாயம் பயம் தீரும்படியாக [அபயமளிக்கவல்லதாக] உள்ளது. வடமொழி வேதாந்தம் காட்டின உஜ்ஜீவனோபாயம் யாதெனில்; * தம் ஏவம் வித்வாந் அம்ருத இஹ பவதி, நாந்ய: பந்தா அயநாய வித்யதே *. என்பதாம். எம்பெருமானை உள்ளபடியறிந்தவனே உஜ்ஜீவிக்கவல்லவன்; உஜ்ஜீவிப்பதற்கு இதுதவிர வேறு வழி கிடையாது — என்பது இதன் பொருள். எம்பெருமானை உள்ளபடியறிவதென்பது யார்க்கும் ஆகாது. * தாம் தம் பெருமையறியார் * தனக்கும் தன் தன்மையறிவரியான் * என்றது தமிழ்வேதம்; வடமொழிவேதமும் * ஸோ அங்க வேத யதி வா ந வேத * என்றது. ஸர்வேச்வரனான எம்பெருமான்றனக்கே தெரியாததான அவன்றன் பெருமையை நாமறிந்து உஜ்ஜீவிப்பதென்பது என்றைக்கும் இயலாதாகையாலே நமக்கு ஸத்கதி கிடைக்க வழியில்லையே! * நாந்ய: பந்தா அயநாய வித்யதே * என்று வெட்டொன்று துண்டிரண்டாகவும் சொல்லிவிட்டதே வேதம்! என்று பலரும் கலங்கியிருக்கும்போது திருமங்கையாழ்வார் திருவவதரித்து எளிதான உஜ்ஜீவனோபாயத்தைக் காட்டியருளிக் கலக்கமும் அச்சமும் தீரச்செய்தார். எங்ஙனேயென்னில்; (திருக்குறுந்தாண்டகம் 19.) * உலகமேத்துங்கண்டியூரரங்கம் மெய்யம்கச்சி பேர் மல்லையென்று மண்டினாருய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே * என்றருளிச் செய்திருப்பதானது (மேலே யெடுத்துக்காட்டின) வடமொழி வேதவாக்கியத்தினால் அஞ்சினவர்களின் அச்சம் தீர்வதற்கேயாகும். பரவ்யூஹவிபவாந்தர்யாமி நிலைகளிலே தேசவிப்ரகர்ஷத்தாலும் காலவிப்ரகர்ஷத்தாலும் கரணவிப்ரகர்ஷத்தாலும் இழந்தவர்கள் உஜ்ஜீவிப்பதற்காகவன்றோ உகந்தருளின நிலங்களென்கிற திவ்யதேசங்கள் எம்பெருமானால் காட்டிக் கொடுக்கப்பட்டன. இவற்றிலே மண்டி உஜ்ஜீவிக்கப் பெறுதவர்களுக்கு வேறு உஜ்ஜீவனோபாயம் எதுவும் கிடையாதுதான் என்றபடி * நாந்ய: பந்தா அயநாய வித்யதே * என்று வடமொழி வேதம் சொன்னதுபோலவே தமிழ் வேதமும் * மற்றையார்க்குய்யலாமே * என்றது. இங்கு மற்றையார் என்றது யாரையென்னில், "அவன் திருவடியைப் பிடிக்காமல் தங்கள் மூக்கைப் பிடிப்பவர்கள்" என்று கோயில் பத்தராவிஸ்வாமி பணிக்கக் கேட்டிருந்தேன். ஆக, பயம் தரும் வேதாந்தமும் பயம் தவிர்க்கும் வேதாந்தமுமான இவையே உபய வேதாந்தமெனப்படும் — என்கிறவிதனை ரஸோக்தியாகக் கொள்க. இங்கு * பதியே பரவித்தொழுந் தொண்டர்தமக்குக்கதியே! * என்ற பெரிய திருமொழிப் (7-1-7) பாசுரத்தையுங் கூட்டிக்கொள்வது. ... ... *

233. * **உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்.** * எம்பெருமானார் தரிசனத்தைச் சேர்ந்தவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு 'உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்' என்கிற விருது அஸாதாரணமாயிருக்கும். இந்த விருது ஸ்ரீமந்நாதமுனிகள் (அல்லது) ஆளவந்தார், (அல்லது) எம்பெருமானார்

காலத்திலிருந்து வழங்குவதாகும். ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருவருக்கொருவர் கடிதமெழுதும் போது இந்த விருதையிட்டேயாகவேணு மென்பர் பெரியோர். அப்படியே நிகழ்ந்துவருகின்றதெங்கும். இதை பூர்த்தியாக எழுத இயலாத போது (ஸ்ரீஉவே) என்றே (*ஸ்ரீமதுபயவே*) என்றே எழுதியே வருகிறார்கள். இங்குச் சிலர் வாதிப்ப தொன்றுண்டு; உபயவேதாந்தமும் அதிகரிக்கவேணு மென்று என்ன நிர்ப்பந்தம்? வடமொழி வேதாந்தத்தில் அதிகாரிகளாகக்கூடிய வர்கள் அதையதிகரித்து அதற்கு ப்ரவர்த்தகர்களாகட்டும்; அதற்கு அதிகாரி களாகப்பெறுதவர்கள் த்ராவிட வேதாந்தத்தையதிகரித்து இதற்கு ப்ரவர்த்தகர் களாகட்டும். ஸம்ஸ்க்ருத வேதாந்தத்திலுள்ள அர்த்தங்கள்தானே த்ராவிட வேதாந்தத்திலுள்ளது. பாஷாபேதமே யொழிய அர்த்த பேதமில்லையே. ஆகவே ஏதேனுமொரு வேதாந்தத்தை மட்டும் அதிகரித்தால் போதுமல்லவா? என்று. இப்படி வாதிப்பவர்கள் பலருண்டு; வாதிப்பவர்களில்லை யெனினும் ஸந்தேஹிப்பவர்களுள்ளார்களென்று கொண்மின். இதற்குச் சொல்லுகிறோம். இந்த உபயவேதாந்தத்தை ஸாகாங்க்ஷவேதாந்தம், நிராகாங்க்ஷவேதாந்தம் என்கிற பெயர்களை யிட்டும் வ்யபதேசிக்கலாம். ஸம்ஸ்க்ருத வேதாந்தம்—ஸாகாங்க்ஷ வேதாந்தம். த்ராவிட வேதாந்தம் நிராகாங்க்ஷ வேதாந்தம். (இதனை விவரிக்கிறோம்.) ஸம்ஸ்க்ருத வேதாந்தமாவது — சாரீரகமீமாம்ஸை யென்கிற ப்ரஹ்மஸூத்ரமும் அதன் பாஷ்யமுமாகும். த்ராவிட வேதாந்தமா வது — திவ்யப்ரபந்த — தத்வ்யாக்யான ரஹஸ்யங்களாகும். ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தில் காணக்கிடைக்காத அர்த்தங்கள் பலவுண்டு; (எவையென் னில்;) சாரீரகமீமாம்ஸையானது பகவானை ஆதியோடந்தமாக ப்ரஹ்மம் — பரப்ரஹ்மம் என்றதேயல்லது ஓரிடத்திலும் நாராயண வாஸுதேவ விஷ்ணு சப்தங்களையிட்டுச் சொல்லிற்றில்லை. அவனை லக்ஷ்மீபதியாகவும் சொல்லிற் றில்லை; அவன் ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் செய்தருளுகிறானென்றும் சொல்லிற்றில்லை; அவன் க்ஷமாதயா வாத்ஸல்யாதி கல்யாண குணங்களை யுடையவனென்றும் விவரித்துச் சொல்லிற்றில்லை. கைங்கரியமே பரம புருஷார்த்தமென்றும் சொல்லிற்றில்லை. ப்ரபத்தியோ ஆசாரியாபிமானமோ தான் தஞ்சமென்றும் சொல்லிற்றில்லை. [இன்னமும் விவரித்துக்கூறவேண்டா] இவையெல்லாம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு இன்றியமையாத அர்த்த விசேஷங்களேயன்றோ. இவற்றைப் பெரும்பாலும் எம்பெருமானார் **கத்யத்ரய** மென்னும் க்ரந்தத்திலே ஸுஸ்பஷ்டமாக அருளிச் செய்துள்ளார். எது கொண்டு அருளிச் செய்தார் தெரியுமோ? அருளிச் செயல் கொண்டே (அதா வது-த்ராவிடவேதாந்தங் கொண்டே) யருளிச் செய்தார் என்னத் தட்டில்லை. இதை மேலே எகரவரிசையில் எம்பெருமானார் என்னுந் திருநாமத்தின் விவ ரணத்திலே மிக விளக்குவோம். ஸம்ஸ்க்ருத வேதாந்தம் ஸாகாங்க்ஷ வேதாந்தம் (அல்லது ஸாபேக்ஷ வேதாந்தம்) என்றும், த்ராவிட வேதாந்த மானது-நிரபேக்ஷ வேதாந்தமென்றும் நிர்தேசிக்கத்தக்கதாயிற்று. அப்படி யானால் நிரபேக்ஷமான த்ராவிட வேதாந்தமொன்றே போதுமே ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு-என்கிற வாதம் தோன்றும். *உளன்சுடர்மிகு சுருதியுள்* என்று ப்ரதமாசார்யரும், *ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி...செய்யமறை தன்னுடனே சேர்ந்து* என்று ரமாசசார்யரும் அருளிச் செய்திருக்கையாலே ஸம்ஸக்ருத வேத வேதாந்தங்கள் விடத்தக்கவையல்ல. ஆசார்ய ஹ்ருதயத் தில் கீதைக்கு ஏற்றம் சொல்லும்போது ''பகவன் ஞானவிதி பணிவகையென்று இவரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்'' என்றருளிச் செய்த கணக்கிலே ''சுடர்மிகு சுருதியென்று இவரங்கீகாரத்தாலே வடமொழி மறை முடிக்கு உத் கர்ஷம்'' என்று பணிக்கத்தகும். ... ... * (தொடரும்)

# இரண்டு சுலோகங்கள் கேளீர்!

ஸ்ரீராமாநுஜனில் திவ்யப்ரபந்த மஹாநிதியை யெழுதிப் போதுபோக்குவது போல, எனது ஸம்ஸ்க்ருத பத்ரிகையான வைதிக மநோஹராவில் ஸாவ சாஸ்த்ரார்த்த ரத்நாவளி யென்று யாவச்சரீரபாதம் நடந்து செல்லக்கூடிய ஒரு க்ருதியை எழுதிவருகிறேனென்று ஏற்கனவே விஜ்ஞாபித்திருக்கிறேன். அதுவும் அகராதி வரிசையிலேயே எழுதப்பட்டு வருகின்றது. அதில் ச்ருதீதிஹாஸ புராண பஞ்சராத்ரங்களிலிருந்தும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் ப்ரமாண வசனங்களை அகராதி வரிசையிலிட்டு ஸம்ஸ்க்ருதத்திலேயே விவரணமும் எழுதிவருகிறேன். இடையிடையில் ஸ்வகீய கவிதா சுலோகங்களையும் இயற்றிச் சேர்த்து வருகிறேன். நாற்றிசையிலும் ஸம்ஸ்க்ருத ரஸிகர்கள் அநுபவித்து வருகிறார்கள். ககாரவரிசையில் (கு-கூ) என்கிற இரண்டெழுத்துக்களுக்கு இரண்டு அநுஷ்டுப்பு ச்லோகங்களை நேற்றிரவு எழுதி வ்யாக்கியானமுமிட்டு வைதிகமநோஹரா முத்ராலயத்திற்கு அனுப்பினேன். அவ்விரண்டு சுலோகங்களையும் ஸ்ரீராமாநுஜன் மூலமாகத் தமிழறிஞர்களும் அநுபவிக்கவேணுமென்று ஆசைகொண்டு இதோ எழுதுகிறேன். (கு) என்கிற எழுத்துக்கிட்ட சுலோகம் வருமாறு.

குக்குட: கூஜதி ப்ரேயாந் ஆகந்தா ஸாம்ப்ரதம் ஸகி! ।
குக்குட: கூஜிதா ஹந்த கிம் குர்யாம் ப்ரூஹி ஹா ஸகி ॥

[குக்குட: கூஜதி ப்ரேயாந் ஆகந்தா ஸாம்ப்ரதம் ஸகி!,
குக்குட: கூஜிதா ஹந்த கிம்குர்யாம் ப்ரூஹி ஹா ஸகி.]

நிகழும் கார்த்திகைமாதம் திருமங்கையாழ்வாருடைய மாதமாகையாலே அவ்வாழ்வாருடைய திவ்யஸூக்தியில் ஒரு பாசுரத்தின் கருத்தை யநுபவிக்க வேணுமென்னு மாசையினால் பெரிய திருமொழியில் (10-10-6) *கோழிகூவெனனுமால் தோழி நானென்செய்கேன், ஆழிவண்ணர் வரும்பொழுதாயிற்று, கோழி கூவென்னுமால* என்கிற அற்புதமான பாசுரத்தை அப்படியே மொழிபெயர்த்தது இந்த சுலோகம். அந்தப் பாசுரத்தின் கருத்தை முன்னம் விளக்கிக் காட்டிவிட்டுப் பின்னர் சுலோகத்திற்கு வருகிறேன். பாசுரத்தின் கருத்துத் தெரிந்தால் சுலோகத்தின் கருத்தும் தெரிந்ததேயாம். அது கேளீர்! கிராமங்களிலே சாமக் கோழி கூவுவதென்று ஒன்றுண்டு. அது சாமத்துக்கொருமுறை கூவும். திருவாய்மொழியிலும் அப்படி சாமக்கோழி கூவுவதுண்டு. கண்ணபிரான் ஆய்ச்சிகள் பக்கலிலே ஒரு ஸங்கேதம் செய்வனும்; (அதாவது 'ஆய்ச்சீ! சாமக்கோழி முதலில் கூவும்போது உன்னோடு கலக்கவருவேன்; மறுபடியும் சாமக்கோழி கூவும்போது உன்னை விட்டுப் பிரிந்துபோவேன்-என்று. இப்படி ஒவ்வோராய்ச்சியிடமும் சொல்லி 'குரவை துவரைகளிலே வடிவுகொண்ட சபலன்'' என்று ஆசார்ய ஹ்ருதயத்தில் (4-10) அருளிச்செய்தபடியே பலபல திவ்யமங்கள விக்ரஹங்களைப் பரிக்ரஹித்து ஒவ்வோராய்ச்சியையும் உகப்பிப்பனும். ஒரு கோபியின் பாசுரம் இது

பாசுரத்தைச் சிறிது மாற்றி அந்வயித்துக் கொள்ளவேணும். எங்ஙனே யென்னில்; ''கோழி கூவென்னுமால் ஆழிவண்ணர் வரும்பொழுதாயிற்று; தோழி நானென்செய்கேன்! கோழி கூவென்னுமால்!'' என்று. *கோழி கூவென்னுமால்! என்று முதலில் ஸந்தோஷமாகச் சொல்லுகிறாள். மறுபடியும் கோழி கூவென்னு

மால் என்பது மிக வருந்திச் சொல்லுவது. ஒரு ஆய்மகள் தன்னுடைய தோழியை நோக்கி தோழீ! கோழி கூவெனகிறது. இதோ கடல்வண்ணனான கண்ண பிரான் வரப்போகிருன் என்று உடல் பூரித்து உள்ளம் பூரித்துச் சொன்னுள். ஒரு யாமகாலம் கண்ணபிரானேடு ஸம்ச்லேஷரஸம் அநுபவித்திருக்கிருள் அவள். ஆயினும் *பலபல வூழிகளாயிடும், அன்றியோர் நாழிகையைப் பலபல கூறிட்ட கூருயிடும்* என்கிற திருவிருத்தப் பாசுரப்படியே ஸம்ச்லேஷகாலம் ஒரு நொடிப் பொழுதாகவும், விச்லேஷ காலம் கல்பகோடி ஸஹஸ்ரமாகவும் தோற்றுவது இயல்வாதலால், கலவியாகக் கழிந்த ஒரு யாமத்தை ஒரு நொடியாகவெண்ணி, அம்மா தோழீ! நான் என்ன பண்ணுவேன்! இதோ சாமக்கோழி கூவென்கிறதே, காதலன் ஓடிப்போய்விடுவனே ! என்செய்வேன் ! என்றலற்றுகிருள். இத்தால், கண்ணனிடம் காதல் கொண்டவர்கள் வருந்திக் கிடப்பதுதான் அதிக காலம் என்றதாயிற்று.

இதே கருத்துத்தான் மேலே குறித்த சுலோகத்திற்கும். சுருக்கமாகக் கேளீர்; [குக்குட: கூஜதி, ப்ரேயாந் ஆகந்தா ஸாம்ப்ரதம் ஸகி!] ஸகி! குக்குட: கூஜதி; ஸாம்ப்ரதம் ப்ரேயாந் ஆகந்தா என்று மகிழ்ச்சி தோற்றக் கூறினபடி. இதைக் கூறி வாய் மூடுவதற்குள்ளே மீண்டும் சொல்லுகிருள் — [குக்குட: கூஜிதா ஹந்த! கிம் குர்யாம் ப்ரூஹி ஹாஸகி!] கூஜிதா என்பது லுட்ரூபம். இதோ கோழி கூவென்னப்போகிறதே! அந்தோ! என்செய்கேன் ! ... .... *

(கூ) என்கிற எழுத்துக்கிட்ட சுலோகம் வருமாறு:

கூலெ ஹாகீரயீநஜ்யா: ததஃ வம்வா ஸரித்தடெ ।
அய ஸாகரவெலாயாம், ஶெஷம் வூரய வண்டித!

கூலே பாகீரதீநத்யா: தத: பம்பாஸரித்தடே,
அத ஸாகரவேலாயாம் சேஷம் பூரய பண்டித !

கங்காநதிக்கரையிலும், பம்பாநதிக்கரையிலும் கடற்கரையிலும் என்று இவ்வளவே ஒரு கவி சொல்லி, மற்றொரு பண்டிதரை நோக்கி 'நீர் சேஷபூரணம் பண்ணும்' என்று சொல்லி நின்றார். இதுகேட்ட அந்த பண்டிதர் உடனே சேஷ பூரணம் பண்ணினர்.

[ராமொ லெபெ ஸஹொதராந் – ராமோ லேபே ஸஹோதராந்] என்று

இந்த சுலோகம் கம்பராமாயணச் செய்யுளொன்றை வுட்கொண்டு இயற்றியது. (அதாவது) சக்ரவர்த்தி திருமகனர் விபீஷணழ்வானை அங்கீகரித்தருளின பின்பு அவனைநோக்கிச் சொல்லும் வார்த்தையாகக் கம்பர் இயற்றிய செய்யுள் —

"குகனெடு மைவரானேம் முன்பு, பின்குன்று சூழ்வான்
மகனெடுமறுவரானேம் எம்மிடையன்பின்வந்த
அகனமர் காதலைய ! நின்னெடு மெழுவரானேம்
புகலருங் கானந்தந்து புதல்வரால் பொலிந்தானுந்தை."

என்பது. இதன் அரும்பெரும் பொருள் கேளீர். விபீடணு! என் தகப்பனர் அறுபதினயிரமாண்டு மலடராயிருந்து, பிறகு ஏககாலத்திலே நான்கு புத்திரர் களைப் பெற்றார்; அவ்வளவிலும் அவர்க்கு த்ருப்தி யுண்டாகவில்லை; இன்னமும் மக்கள் வேணுமென விரும்பி, என்னையும் லக்ஷ்மணனையு மழைத்து 'நீங்கள் காட் டுக்குச்சென்று இன்னுஞ் சில ஸஹோதரர்களை ஸம்பாதித்துக்கொண்டு வாருங்க

ளென்று நியமிக்க, அந்த நியமனத்தை நிறைவேற்ற நாங்களிருவரும் புறப்பட்டோம். புறப்பட்ட முஹூர்த்தம் நன்ருயிருந்தபடியால் கங்கைக்கரையில் குஹனுகிற தம்பியையும், பம்பைக் கரையில் ஸுக்ரீவனுகிற தம்பியையும், கடற்கரையில் நீயாகிற தம்பியையும் பெற்ரேம். விபீஷணு! உன் தகப்பனுராகிய தசரதர் ஏழு புத்திரர்களைப்பெற்றுப் பொலிகின்ருர்—என்பதாம். இதனுல், சக்ரவர்த்தி திருமகனுர் தம்முடைய பக்தர்கள் பக்கலில் ஸஹோதரபாவனை கொள்ளுமியல்வினர் என்பது விளங்கும்.

இந்த ப்ரகரணத்தில் அன்பர்களுக்கு ஒன்று விஜ்ஞாபிக்கிறேன் திவ்ய ப்ரபந்த மஹாநிதி தமிழ்த்துறைக்காகும். வடமொழித் துறைக்காக ஸம்ஸ்க்ருத ஸாகா தரங்கமாலிகா என்னும் பெயரால் மாதந்தோறும் ஸ்ரீ ராமாநுஜனில் ஒரு நான்குபக்கமாவது வெளியிட்டு வருவேன். ஸம்ஸ்க்ருத என்றது ஸம்ஸ்க்ருத ப்ரமாணவர்க்கங்களென்றபடி. அதுவாகிற கடலின் அலைகளும் ஸ்ரீராமாநுஜனில் வீசும், ... ... .... .... .... ... *

## ஸமஸ்யாபூரணம்

ஸம்ஸ்க்ருதபண்டித கோஷ்டிகளில் ஸமஸ்யை கொடுப்பதும் அதைப் பூரணம் செய்வதும் ஒரு விநோதமான போதுபோக்கு. நான்கு பாதங்கள் கொண்ட ஒரு சுலோகத்தில் ஒரு பண்டிதர் ஒரு பாதத்தைச் சொல்லி, அதற்குச் சேர மற்ற மூன்று பாதங்களைக் கூறி சுலோகத்தைப் பூர்த்திசெய்யும்படி மற்ருெரு பண்டிதரை வேண்டுவது, அவர் பூர்த்தி செய்வது – ஆகிய இதற்கு ஸமஸ்யாபூரணமென்று வ்யபதேசம். இந்த ப்ரக்ரியை அநாதிகாலமாக நடந்துவருவதொன்று. வேதாந்ததேசிகன் தமது ஸ்தோத்ர பாஷ்யத்தின் முடிவில் "ஸமஸ்யா ஸஹஸ்ரீ ... கவிகதக ... ஸஹஸ்ரம் ..." * என்று தமக்கு ஸமஸ்யாஸஹஸ்ரீ என்று விருது உள்ளதாகக் கூறியிருப்பது காண்க. ஸம்ஸ்க்ருத பத்ரிகைகளில் இற்றைக்கும் இந்த ப்ரக்ரியை நிகழ்ந்து வருகின்றது. ப்ரக்ருத ஸமாசாரம் கேளீர். ஸ்ரீ காமகோடி ஶங்கராசார்ய ஸ்வாமிகள் ஸமீபகாலத்தில் நேத்ர சிகித்ஸை செய்வித்துக் கொண்டதனுல் அவர்களைக் காண்பதற்குப் பல வூர்களிலிருந்து பல பக்தர்கள் இவ்விடம் வந்து போகிருர்கள். என்னேடு பரிசயமுள்ளவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் பலர் (வைதிகர்களும் லௌகிகர்களும்) என்னிடமும் வருகிருர்கள். பெரும்பாலும் தினப்படியாகவே ஒருமாத காலமாய் இப்படி நேர்ந்து வருகிறது. இதை ஒரு பரம பாக்யமாக நினைக்கிறேன். நேற்று (10-12-71) காலை சில பண்டிதர்கள் வந்திருந்தனர். அவர்கள் இருப்பது கேரள ப்ராந்தமாம். அவர்களில் ஒருவர் (நீலகண்டசாஸ்த்ரியென்பவர்) தம்மைப் பற்றிச் சொல்லிக்கொள்ளும்போது, தாம் ஆசுகவியென்றும், ஸமஸ்யாபூரணங்கள் அவலீலையாகச் செய்பவரென்றும் சொல்லி, 'தாங்கள் ஒரு ஸமஸ்யை கொடுக்க வேணும்' என்ருர். உடனே ஒரு ஸமஸ்யை கொடுத்தேன். "யத்தூர்த்தானாம் பாத ... ஶரணமுபகதாந் ... பாலயாமாஸ லக்ஷ்மீ: – தூர்த்தாநாம் பாதமூலம் சரணமுபகதாந் பாலயாமாஸ லக்ஷ்மீ:" என்று ஸமஸ்யை சொன்னேன். இதன் பொருள் என்னவென்ருல், தூர்த்தர்களின் பாதாரவிந்தத்தை அடைக்கலம்புகுந்தவர்களைப் பிராட்டி காப்பாற்றினுள் என்கை. இதைக்கேட்ட அந்த சாஸ்த்ரி சிறிதுநேரம் ஆலோசித்து 'இப்போது ஸ்புரிக்கவில்லை. தாங்கள் பூரணம் செய்து சொன்னுல் கேட்டு ஸந்தோஷிக்கிறேன்' என்ருர். நான்செய்து சொன்ன பூரணமாவது —

𑌕𑍇𑌷𑌾𑌂 𑌮𑍈𑌤𑍍𑌰𑍀 𑌵𑌿𑌧𑍇𑌯𑌾? 𑌮𑍁𑌨𑌿𑌵𑌰𑌦𑌯𑌿𑌤𑍋𑌜𑍍𑌜𑍀𑌵𑌨𑌂 𑌵𑌸𑍍𑌤𑍁 𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍?
𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌯𑌤𑍇 𑌕𑌾𑌨𑍍? 𑌦𑌶𑌰𑌥𑌤𑌨𑌯𑍋 𑌵𑌾𑌯𑌸𑌂 𑌕𑌿𑌂 𑌚𑌕𑌾𑌰?
𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌥𑌂 𑌮𑍁𑌰𑌰𑌿𑌪𑍁𑌸𑌵𑌿𑌧𑍇 𑌭𑍂𑌰𑌿𑌶𑍋 𑌯𑌾𑌚𑌤𑍇 𑌕𑌾?

[கேஷாம் மைத்ரீ விகேயா ? முநிவரதயிதோஜ்ஜீவநம் வஸ்து கிம் தத் ?
லக்ஷமீசஸ் த்ராயதே காந் ? தசரததநயோ வாயஸம் கிம் சகார ?
பக்தாநாம் ரக்ஷணார்த்தம் முரரிபுஸவிதே பூரிஸோ யாசதே கா ?]

~~வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ்~~

என்று மூன்று பாதங்களைச் சொல்லிப் பூரணம் செய்தேன், இந்த மூன்று பாதங்களில் ஐந்து வினாக்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றுக்கு ஸமஸ்யையான ஒரு பாதம் விடைதருவதாகும். இந்த வினாவிடைகளைச் சிறிது விவரிக்கிறேன்.

[கேஷாம் மைத்ரீ விகேயா ?] யாரோடு நட்புக் கொள்வது கூடாது ? என்பது முதல் வினா. இதற்கு விடை – ஸமஸ்யையில் முதற்பதம்; [தூராத்தாநாம்] என்பது. துஷ்ட ஸஹவாஸம் கூடாதென்கை. [முநிவரதயிதோஜ்ஜீவநம் வஸ்து கிம் தத் ?] மஹர்ஷிபத்நியை உஜ்ஜீவிப்பித்த வஸ்து எது ? இரண்டாவது வினா. ஸமஸ்யையில் [பாதபத்மம்] என்கிற இரண்டாவது பதம் இதற்கு விடை; கௌதமபத்னியான அஹல்யையின் சாபவிமோசனம் பண்ணினது இராமபிரானுடைய திருவடித் தாமரை யென்றபடி. [லக்ஷ்மீஸஸ் த்ராயதே காந் ?] திருமகள் கேள்வன் யாரைக் காத்தருளுகிறான் ? என்று மூன்றாவது வினா [சரணமுபகதாந] என்று ஸமஸ்யையிலுள்ளது விடை. சரணாகதர்களை ரக்ஷித்தருளுகிறானென்கை. [தசரததநயோ வாயஸம கிம சகார ?] இராமபிரான் (சித்திரகூடத்தில்) அபசாரப்பட்ட காகத்தை என்ன பண்ணினார் ? என்பது நாலாவது வினா. [பாலயாமாஸ] என்று ஸமஸ்யையிலுள்ளது விடை. ரக்ஷித்தருளினாரென்கை. [பக்தாநாம் ரக்ஷணார்த்தம் முரரிபுஸவிதே பூரிசோ யாசதே கா ?] பக்தர்களைக் காக்கும் பொருட்டு எம்பெருமான் பக்கலில் பெரும்பாலும் மன்றாடுவது யார் ? என்பது ஐந்தாவது வினா. [லக்ஷ்மீ:] என்று ஸமஸ்யையிலுள்ள முடிவானபதம் அதற்கு விடை. புருஷகாரக்ருத்ய நிரதையான பிராட்டிதானே மன்றாடுகிறவள்.

இதை அந்த சாஸ்த்ரிகளிடம் விளக்கிச் சொல்லி அவரெதிரிலேயே இதை எழுதியும் முடித்தேன். இப்போது நினைவுக்கு வந்ததொன்றை உபேக்ஷிக்க முடியாமல் ஈண்டு எழுதுகின்றேன். ஸ்ரீ வில்லிபுத்தூரில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. மேலைவாத்யார். திருமலை ஐயங்கார்ஸ்வாமி [இப்போது திருமலை திருப்பதி, பெரிய ஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளும் மஹா ஸ்வாமியின் பூர்வாச்ரமமாதுலர்] இத்தகைய கவித்திறங்களில் அத்விதீய நிபுணராய் விளங்கினவர். ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே எழுந்தருளியிருந்த பரமைகாந்திஸார்வபௌம ஸ்ரீமத் சிறுபுலியூர் மஹா ஸ்வாமியின் இளைய திருக்குமாரரான ஸ்ரீ. தொட்டயாசார்ய ஸ்வாமியும் அவரை நிகர்த்தவர். அதுவொருகாலம் ! வித்வான்களுக்கு ஸுபிக்ஷமான காலம். நினைத்து நினைத்து அழுது தீர்க்கவேண்டியகாலமிது. ... *

---

# "வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதை தமிழ்"

*மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாளில் வெளிவருகின்ற இவ் விராமாநுஜன் ஸஞ்சிகை மார்கழித்திங்களுக்குப் பெருமை விளைக்கும் திருப்பாவையின் பெருமையைச் சிறிது பேசுகின்றது. அபூர்வமான அரிய பெரிய அர்த்தங்கள் கேளீர்.

திருப்பாவைக்குத் தனியனிட்டருளின பட்டர் * நீளாதுங்க ச்லோகத்தில் ச்ருதிஶதஶிரஸ்ஸித்தம் * என்கையாலும், *பாதகங்கள் தீர்க்கும் பாசுரம் பாடின பேராசிரியர் * வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதை தமிழ் * என்கையாலும் திருப்பாவைக்கும் வேதத்திற்கும் தொடர்பு இருப்பதாக ஸ்பஷ்டமாய்க் காட்டியுள்ளார்கள். அந்தத் தொடர்பை அடியேன் ஆராய்ந்துணர்ந்த வகையில் விஜ்ஞாபிக்கிறேன். இந்த விஜ்ஞாபனம் இவ்வருஷத்திற்கு அபூர்வமான விருந்து.

1. [*மதிநிறைந்த நன்னாளால்.] நம்முடைய யஜுர்வேதத்தில் நாலாவது காண்டம் ஏழாவது ப்ரச்நம் சமகப்ரச்ந மென்று பேர்பெற்றது. அதில் இரண்டாமநுவாகம் * உதிஸ்ரு ச மே ஸுதிஸ்ரு ச மே * என்று முடிகிறது. அடுத்த அநுவாகம் * ஸுஷா ச மே ஸுதிநம் ச மே * என்று முடிகிறது. ஸுஷா என்றாலும் ஸுதிநம் என்றாலும் நன்னாளே. நல்லமதி (ஞானம்) நிறைந்த நாளே நன்னாள் என்று வேதம் காட்டிற்று.

2. [செய்யாதன செய்யோம்.] செய்யக்கூடாதென்று ஶாஸ்த்ரங்கள் மறுத்தவற்றைச் செய்யோம் என்பது ஒரு பொருள். (2) சாஸ்த்ரம் விதித்திருந்தாலும் நம் முன்னோர் செய்யாதவற்றைச் செய்யோம் என்பது மற்றொரு பொருள். இவ்விரண்டு பொருளும் வேதம் காட்டியவை. இரண்டாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்தில் * நாநருதம் வதேத் ... இத்யாதி. தைத்திரீயோபநிஷத்தில் * அத யதி தே கர்மவிசிகித்ஸா வா வ்ருத்தவிசிகித்ஸா வா ஸ்யாத் * என்று தொடங்கி * யதா தே தத்ர வர்தேரந், ததா தத்ர வர்தேதா: * இத்யாதிகள் ஓதியிருப்பதுகாண்க.

3. [ஓங்கியுலகளந்தவுத்தமன்.] முதற் காண்டம் இரண்டாம் ப்ரச்நத்தில் * இதம் விஷ்ணுர்விசக்ரமே த்ரேதா நிததே பதம் * என்று ஓங்கியுலகளந்த சரிதை ஓதியிருப்பது காண்க.

4. [ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து ... இத்யாதி.] மழை பெய்வதற்குப் பூர்வாங்கமாக நிகழ்வனவற்றைச் சொல்லியுள்ளது. முதற் காண்டம் ஆறுவது ப்ரச்நத்தில் * ஸம்வத்ஸரமேவாநுவாகத்தில் * புரோவாத ஜநயந் ... அப்ர ஜநயந் ... வித்யுதம் ஜநயந் வ்ருஷ்டிம் ஜநயந் * என்றோதியிருப்பது காண்க.

5. [வாயினாற்பாடி.] பாடுவது வாயில்தானே. வாயினால் என்று சொல்லவேணுமோ? சொல்லவேணும். இரண்டாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்தில் * வாக்ச வை மநஶ்சார்தீயேதாம் * என்று தொடங்கி வாக்குக்கும் மனத்துக்கும் விளைந்ததொரு விவாதத்தை ஓதிற்று. வாக்கு நான்தான் உயர்ந்தவன் என்றதாம்; மநஸ்ஸு நான்தான் என்றதாம். இருவரும் ப்ரஜாபதியிடம் சென்று தீர்ப்பு கூறக் கேட்கையில் ப்ரஜாபதி மனந்தான் உயர்ந்ததென்று தீர்ப்புக்கூற வாக்கு கோபங்கொண்டு * தஸ்மை வாக் தாநீ ஹவ்யம் ந வாஹா ஜு ஹவநி தத்யுஸீத் * =

ப்ரஜாபதே! உன்னைக்குறித்து ஹோமம் பண்ணும்போது உன்னை நான் வாயாற் சொல்லமாட்டேன் போ — என்றதாம். வாக்கு அவனைச் சொல்லமாட்டாதே யொழிய * மாயனை மன்னு வடமதுரைமைந்தனை நன்ருகப் பாடுமென்று காட்ட * வாயினுற்பாடி * என்றது.

6. [புள்ளரையன்கோயில்.] நாலாவது காண்டம் முதல்ப்ரச்நத்தில் *ஸுவ ணெ-ூாஸி மாஸ-தாஷ்ரீ திவஂதெஶமிஷா மாயந்தூ ஂ அக்ஷ-ஃ .... * இத்யாதியால் புள்ளரையன் பெருமை யோதினபடி காண்க.

7. [கலந்து பேசின பேச்சரவம்.] வேதமானது * ஸஹொவாச வ்யாஸஃ வாராஶாயஃ * யவெ கிஞ உநஸவஉ தஉெஷெஜூ * ப்ரஹ்மவாதிநோ வதந்தி * என்று ஆப்தர்களோடு கலந்து பேசினமை காண்க. ஆசார்ய ஹ்ருதயத்தில் "வ்யாஸமநு ப்ரஹ்ம வாதிகளை வேதம் சொல்லுமாபோலே * என்றருளிச் செய்தது நோக்குக.

8. [தேவாதிதேவனைச் சென்று நாம் சேவித்தால்.] ஸகல தேவதைகளுக்கும் மேற்பட்டவன் ஸ்ரீமஹாவிஷ்ணு, என்பது தேவாதிதேவனென்றதற்குப் பொருள். ஐந்தாவது காண்டம் — ஐந்தாவது ப்ரச்நத்தில் * அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணுஃ பரமஃ * என்ரேுதினது காண்க. ஸகலதேவதைகளுக்கும் அக்நிதேவன் கீழ்ப்பட்டவன்; ஸ்ரீமஹாவிஷ்ணு மேம்பட்டவன்-என்பது இந்த வேதவாக்யத்தின்பொருள்.

9. [தூமணிமாடத்து — மாமான்மகளே.] என்று ஒருவித்மான உறவைச் சொன்னது — எம்பெருமான் ஸகலவிதபந்து என்று சொன்னபடி. ஸுபாலோபனிஷத்தில் * மாதா பிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணஂ ஸுஹ்ருத்கதிர் நாராயணஃ * என்று ஸகலவித பந்துவும் ஸ்ரீமந் நாராயணனே என்று ஓதியுள்ளது காண்க.

10. [நோற்றுச் சுவர்க்கம் புகுகின்றவம்மனாய்.] வேதத்தில் * ஸுவர்கம் லோகமெதி * ஸுவர்கம் லோகமாரோஹதி * என்று பலகால் ஓதியுள்ளது. ஸப்த காண்டங்களுக்குள்ளும் ஸுவர்க மென்கிற பதமுள்ளதே யொழிய ஸ்வர்கபதம் ஓரிடத்திலும் கிடையாது. அதுகாணவேணுமானுல் ப்ராஹ்மணத்தில்தான் காணவேணும். ஸுவர்க மென்கிற பதத்திற்கு விண்ணுலக மென்கிற பொருள் தவிர (ஸு — வர்கஃ) நல்ல கோஷ்டி என்றும் பொருளாகும் இப்பொருளை சோளஸிம்ஹபுரம் தொட்டயாசார்ய ஸ்வாமி ஒரு விஜயக்ரந்தத்தில் பணித்துள்ளார். அதை ரங்கராமாநுஜ பாஷ்யகாரரும் எடுத்துக்காட்டியுள்ளார். பெரியாழ்வார் * நாவலம் பெரிய பதிகத்திற்குப் பயனுரைக்கும் பாசுரத்தில் * சாது கோட்டியுட்கொள்ளப் படுவாரே * என்றவிடம் காண்க. ஸு — வர்கஃ = சாது கோட்டி. வேதபுருஷனுக்கு உள்ளுறை விவக்ஷிதமான அர்த்தமே * சுவர்க்கம் புகுகின்ற * என்ற இவ்விடத்திலும் விவக்ஷிதமெனக.

11. [கற்றுக்கறவைக் கணங்கள் பல கறந்து.] தாம் கற்கவேணும்; நன்ருகக் கறக்கும் பசுக்கள்போல் அர்த்த விசேஷங்களை நன்ருகக் கறக்கும் வள்ளல்களான மஹான்களிடத்தில் அடுத்தடுத்துக் கேட்கவேணும்-என்பது ஸ்வாபதேசார்த்தம். (வேதத்தில்) தைத்திரீயாரண்யகத்தில் முதல்ப்ரச்நத்தில் *ஜக்ஷிரே ஹ நீவ பூருஷாஃ உப து ஹவ்யமெசா குதிமிதி * என்ரேுதியிருப்பது காண்க.

ஸஹ்ருதய ஸார்வபௌமர்களே! அடியேனுடைய உபந்யாஸ கோஷ்டிகளில் இங்ஙனே நிர்வஹிப்பதொரு புடையுண்டு என்று காட்டுவதற்கு இது ஆதர்சமாகக் காட்டினபடி. "வரிஷ்டாஸ்த வநாநெநா தூஷணீயாஃ"

# தென்னாடு வடநாட்டுத் திருப்பதி யாத்திரை.

(முன் தொடர்ச்சி)

## முதலியாண்டான் ஸன்னிதி. இதைப் பச்சைப் பெருமாள்கோயில் என வழங்குவர். பேட்டை என்பர் ஸாமாந்யர்.

ஸ்வாமி எம்பெருமானுர்க்கு ஸஹோதரிகள் இருவர் — நாச்சியாரம்மை யென்றும், தாமரையாளம்மை யென்றும். அவர்களுள் மூத்தவளுடைய திருக்குமாரர் முதலியாண்டான். பச்சை வாரணப்பெருமாள் கோவிலில் சித்திரை மாதப் புனர்வசு நன்னாளில் தோன்றியவர். பண்டு த்ரேதாயுகத்தில் ராமாவதாரத்தில் ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீராமனுகவும் ஆதிசேஷன் லக்ஷ்மணனுகவும் அவதரித்திருந்து, பெருமாள் இளையபெருமாளிடம் ஒழிவில் காலமெல்லாம் வழுவிலாத அடிமைகளைக் கொண்டு போந்தமை ப்ரஸித்தம். அந்த அவதாரத்தில் ஒரு பரமார்த்தம் பெருமாளுடைய திருவுள்ளத்தில் பட்டது; வகுத்த விஷயத்தில் அடிமை செய்வது ரஸமேயல்லது அடிமைகொள்வது ரஸமன்று என்றுபட்டது. அதனுல், அந்த ஆதிசேஷனை சேஷியாக வைத்துத் தான் சேஷபூதனுக விருந்து அடிமை செய்து களிக்கக் காதல்கொண்டு த்வாபரயுகத்தில் அந்த ஆதிசேஷனை நம்பி மூத்தபிரானென்கிற பலராமனுக முன்தோன்றலாய்த் திருவவதரிப்பித்துத் தான் "பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்" என்று ஆண்டாளருளிச் செய்தபடி அவன் தம்பியான க்ருஷ்ணனுகத் தோன்றி, பலராமனுக்கு சேஷித்வத்தையும் தனக்கு சேஷத்வத்தையும் காட்டி நின்ற விடத்திலும், செய்து போந்த அதிமாநுஷ சேஷ்டிதங்களாலே தனக்கு சேஷித்வமே உலகறிய நின்றபடியால் அக்குறை தீர மீண்டும் ஒரு அவதாரம் செய்யத் திருவுள்ளங்கொண்டு இக்கலியுகத்தில், தம்பியான இளைய பெருமாள் இளையாழ்வாரென்கிற ஸ்வாமியாகவும் தான், தாசரதி யென்கிற நிஜ நாமத்துடனே முதலியாண்டானுகவும் திருவவதரிக்கலாயிற்று.

"பாதுகே யதிராஜஸ்ய கதயந்தி யதாக்யயா, தஸ்ய தாசரதே: பாதௌ சிரஸா தாரயாம்யஹம்" என்பது இவ்வாசிரியருடைய தனியனுதலால் ஸ்ரீராமாநுஜ பாதுகா என்றே இவர் வழங்கப்பெற்று வந்தார். எம்பார்க்கு ராமாநுஜ பதச்சாயை யென்கிற ப்ரஸித்திபோலே இவர்க்கு ராமாநுஜ பாதுகை யென்கிற ப்ரஸித்தி நிகழ்ந்தது.

ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டு தென்னத்தியூரர் கழலிணைக்கீழே வாழ்ந்தருளுங்காலத்தில் கூரத்தாழ்வானேடு கூட இவரும் ஸ்வாமியை ஆச்ரயித்து வேதாந்த ரஹஸ்யார்த்தங்களை அதிகரித்து நல்விரகராயிருந்தார். திருத்தகப்பனுரான வாதூல குல திலக-அநந்தநாராயண தீக்ஷிதரிடத்திலேயே ஸாமாந்ய சாஸ்த்ரங்களையும் திவ்யப்ரபந்தங்களையும் அதிகரித்திருந்தபடியாலே ஸ்வாமியின் அபிமானத்திற்கு ஆழ்வானைப்போலவே இவரும் இலக்காயிருந்தார். ஸ்வாமி இவ்விருவரையுமே தண்டும் பவித்ரமுமாகத் திருவுள்ளம்பற்றி யிருந்தது.

*லௌகிகே ஸமயாசாரே க்ருதகல்போ விசாரத.* என்று ஸ்ரீராமபிரானைப்பற்றி ஸ்ரீராமாயணத்திற் கூறியதுபோல, ஸ்வாமியின் சிஷ்யவர்க்கங்களுள் இவரிடத்து லௌகிகஸாமர்த்தியமும் சிறப்புறப்பொருந்தியிருந்ததனால் ஸ்ரீரங்கநாததிவ்யாலய கைங்கர்ய நிர்வஹண துரந்தரத்வம் இவர்க்கு ப்ராப்தமாயிற்று. ஸேனைமுதலியார் போலவிருந்து அரங்கன் கைங்கரியத்தை ஆண்டுவந்தபடியினாலேயே இவர்க்கு முதலியாண்டானென்று திருநாமமாயிற்றென்பர் பெரியோர். கோயிலொழுகில் இவரைப்பற்றின ப்ரஸ்தாவத்தில் — ''முதலியாண்டானும் குறட்டிலே யிருந்து கார்யத்தையும், உள்ளே கருவுகல வாசலிலே யிருந்து திருமேனி யுபசாரத்தையும், ஸன்னிதியிலேயிருந்து திருப்பவள வுபசாரங்களையும் உடையவர் நியமனப்படி ஆராய்ந்துகொண்டு அனைத்தழகும் கண்டருளப் பண்ணிக்கொண்டிருந்தார்'' என்றுள்ளது.

திருவாய்மொழியீட்டில் (2—9—2.) *ஞானக் கை தா* என்றவிடத்தில் ''எம்பார்க்கு ஆண்டானருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது; அதாவது-ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கை கொடுத்தால் எடுக்குமவர்களுக்கு எளிதாய் ஏறுமவனுக்கு எளிதாயிருக்குமிறே; அப்படியே யாகிறது என்று''—என்கிற ஐதிஹ்ய ஸ்ரீஸூக்தி யுள்ளது. இதன் விவரணம் வருமாறு;—முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்தி லெழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரான வொரு ஸ்ரீவைஷ்ணவர் கோயிலிலே வந்து எம்பார் ஸன்னிதியிலே கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருந்தார். அப்போதொருநாள் சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்க விருக்கையில் இந்த ஸ்ரீவைஷ்ணவரும் தமக்கும் [சக்ராங்கனம்] ஸாதிக்கும்படி வேண்டினர். அப்போது எம்பார் 'உமக்கு விசேஷ ஸம்பந்தமுண்டா?' என்று அவரைக் கேட்க; 'தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்' என்று அவர் விண்ணப்பஞ்செய்ய. அவ்வளவிலே எம்பார் இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாததவரென்று அறியாதே இவர்க்கும் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பண்ணி இவரைக்கொண்டு கைங்கரியங்களும் கொண்டெழுந்தருளியிரா நிற்கையில் ஆண்டானும் திரும்பிக் கோயிலிலே யெழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீவைஷ்ணவர் ஆண்டானை வந்து ஸேவிக்க, ஆண்டானும் முன்புபோல இவரைக்கொண்டு வேண்டும் கைங்கரியங்களைக் கொள்ள. அப்போது எம்பாருமறிந்து ஆண்டான பக்கலிலே யெழுந்தருளி, 'கனக்க அபசாரப்பட்டேன்' என்றருளிச் செய்ய, இவருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தையறிந்து அப்போது ஆண்டானருளிச் செய்த வார்த்தை—''ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால் எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே; அப்படியே யாகிறது'' என்று. ஸம்ஸாரஸாகரத்திலே அழுந்தினவனுக்கு அடியேனும் கைகொடுத்து தேவரீரும் கைகொடுத்தால என்ன குறை? தேவரீர் தவறாக ஒன்றுஞ் செய்துவிட வில்லை; எதற்காக க்லேசிப்பது? என்பது முதலியாண்டானுடைய பரமோதார மதுரமான திருவாக்கு. [கைகொடுப்பதாவது-ஞானக்கை கொடுப்பது]

முதலியாண்டான் பணித்தவார்த்தைகளென்று அரியனவாகச் சில காணுகின்றன. ஸ்ரீராமாயணத்திற்கு ஸ்வாபதேசார்த்தம்போலே சிலவார்த்தைகள் அருளிச்செய்தாராம்; அவையாவன—

1. பிராட்டிக்குச் சிறையிருப்புபோலே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஸம்ஸாரத்திலிருப்பு.
2. பிராட்டி இளையபெருமாள் விஷயத்தில் அபசாரப்பட்டு உடனே பெருமாளைப் பிரியநேர்ந்ததுபோல, சேதநர்களுக்கு பாகவதாபசாரம் எம்பெருமான் திருவடி ஸம்பந்தத்தை விலகப்பண்ணும்.
3. பிராட்டிக்கு அசோகவனம் போலே இவர்களுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தரூபமான தேஹம்.
4. பிராட்டிக்கு அரக்கிகளின் ஸஹவாஸம்போலே இவர்களுக்குப்புத்ரகளத்ராதிகளின் ஸஹவாஸம்.
5. பிராட்டிக்கு மாரீசமாயாமிருகக் காட்சிபோலே இவர்களுக்கு "பாவியேனைப் பலநீகாட்டிப் படுப்பாயோ" என்னும்படியான விஷயங்களின் காட்சி.
6. பிராட்டிக்குத் திருவடிநேர்பட்டாப்போலே இவர்களுக்கு ஆசார்யன் நேர்படுவது.
7. பிராட்டிக்குத் திருவடிசொன்ன ஸ்ரீராமகுணங்கள்போலே இவர்களுக்கு ஆசார்யனுபதேசிக்கும் பகவத்விஷயாதிகள்.
8. பிராட்டிக்குத்திருவடி அடையாளங்கள் கூறித் திருவாழிமோதிரம் கொடுத்ததுபோல இவர்களுக்கும் குருபரம்பரா பூர்வகமான திருமந்த்ரோபதேசம்
9. பிராட்டி திருவடிக்குச் சூடாமணிகொடுத்தாப்போல இவர்கள் ஆசார்யன் விஷயத்தில் *தலையல்லால் கைம்மாறிலேன்* என்றிருக்குமிருப்பு.
10. பிராட்டிக்கு ஸ்ரீ விபீஷணாழ்வானது திருமகளாருடைய ஸஹவாஸமும் பேச்சும் தாரகமாயிருந்ததுபோல இவர்களுக்கு பாகவதஸஹவாஸமும் அவர்களுடைய திவ்யஸூக்திகளுமே தாரகமாயிருக்கும்.
11. பெருமாள் பிராட்டியிருந்தவிடத்தேவந்து விரோதிகளைக் கிழங்கெடுத்து அவளைக்கைக்கொண்டதுபோல, எம்பெருமான் *ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்று துளங்குமிவர்களிடத்தேறவந்து *பொய்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்புமாகிற விரோதிகளை வேரோடே களைந்து நித்யமுக்தர்களோடே ஒருகோவையாக்கும்படி கைக் கொண்டருள்வது... இங்ஙனே பல பொருள்களுள.

வேதாந்த தேசிகன் பெரும்பாலும் இப்பொருள்களையே திருவுள்ளம்பற்றி

"தர்ப்போதக்ர தசேந்த்ரியாநநமநோ நக்தஞ்சராதிஷ்டிதே
தேஹேஸ்மிந் பவஸிந்துநா பரிகதே தீநாம் தசாமாஸ்த்தித:,
அத்யத்வே ஹநுமத்ஸமேந குருணா ஸம்போதிதார்த்தஸ் ஸுதீ:
லங்காருத்தவிதேஹ ராஜதநயா ந்யாயேந லாலப்யதே"

என்கிற ச்லோகத்தை ஸங்கல்ப ஸூர்யோதயத்திலே பணித்தருளினார். அவ்வாசிரியர்தாமே ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஆண்டான்வார்த்தையாக அருளிச்செய்ததொன்றுண்டு; அதாவது—(அதில் எட்டாவதான, அதிகாரிவிபாகாதிகாரத்தில்—)"ஒருமலையில் நின்றும் ஒருமலையில்தாவும் ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்

களைப்போலே பாஷ்யகாரர் ஸம்ஸாரலங்கநம் பண்ண அவரோடுண்டான குடல் துடக்காலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டானருளிச்செய்த பாசுரம்'' என்று.

# திருவல்லிக்கேணி

(கேசவன்) மாதவா! இப்போது நாம் காஞ்சீபுர ப்ராந்தத்திலுள்ள திருப்பதிகளை யெல்லாம் ஸேவித்துக்கொண்டு சென்னைமாநகரில் திருவல்லிக்கேணிவந்து சேர்ந்திருக்கிறோம். இங்கிருந்துகொண்டே திருவெவ்வுளூர், திருநின்றவூர், திருநீர்மலை, திருவிடவெந்தை, சோளஸிம்ஹபுரமென்கிற திருக்கடிகை ஆகிய தொண்டைநாட்டுத் திருப்பதிகளை ஸேவிப்போம்.

## ஸ்ரீ பார்த்தஸாரதியும் - அழகியசிங்கரும்

திருவல்லிக்கேணி ஸன்னிதியில் ஸ்ரீ பார்த்தசாரதி யெம்பெருமானுக்குப் போலவே அழகியசிங்கருக்கும் ப்ராதான்யமுள்ளது. திருமங்கையாழ்வார் *விற்பெருவிழவுங் கஞ்சனும் மல்லும் வேழமும் பாகனும் வீழச்செற்றவன்தன்னை......... சோல்கையில் கொண்டு பார்த்தன் தன் தேர்முன் நின்றானை...திருவல்லிக்கேணிக் கண்டேனே* என்றதுபோல, *தெள்ளிய சிங்கமாகியதேவைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே* என்று மருளிச்செய்தார். தெள்ளிய சிங்கப்பெருமானைத் தெளிசிங்கப் பெருமாளென்றும் வழங்குவதுண்டு. துளசிங்கப்பெருமானென்பது சிதைவான வழக்கு. உள்ளேசென்று ஸேவித்துவிட்டுத் திருவெவ்வுளூர் புறப்படலாமென்றிருக்கையில்;

(மாதவன்) கேசவா! திருவல்லிக்கேணியைப் பாடுகிற திருமங்கையாழ்வார் *நன்மயிலைத் திருவல்லிக்கேணி யென்றும்* மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி யென்றும் அருளிச்செய்திருக்கையாலே மஹிளாபுரி யென்கிற மயிலையும் இதுதானே; *எண்ணருஞ்சீர்ப்பொய்கை முன்னோர் இவ்வுலகில் தோன்றியவூர், வண்மைமிகு கச்சிமல்லை மாமயிலை* என்று மணவாளமாமுனிக ளருளிச்செய்தபடி பேயாழ்வாருடைய திருவவதாரம் இங்குத்தானே, அவரையும் ஸேவித்துப் போவோமென்ன;

(கேசவன்) மயிலையென்று தனியே சிறிது தூரத்திலுள்ளது; அங்குக் கேசவப்பெருமாள் ஸன்னிதி யென்றும் மாதவப் பெருமாள் ஸன்னிதி யென்றும் இரண்டுகோவில்களுள்ளன; ஆண்டாள் *வங்கக்கடல் கடைந்த மாதவனைக் கேசவனை* என்று இருவரையும் பாடியிருக்கையாலே இருவரையும் ஸேவிப்போம்...........என்று சொல்லி இரண்டு ஸன்னிதிகளிலும் பேயாழ்வாரை ஸேவித்துத் திருவெவ்வுளூர் புறப்படலாயினர். ... ... ... ...

# திருவெவ்வுளூர்

(கேசவன்) ஸ்ரீமத் பரமஹம்ஸ அழகியசிங்கரென்னும் ஸ்ரீமதஹோபில மடம் ஜீயர் ஸ்வாமிகளின் ஆதீனமான இந்த திவ்யதேசம் நாளடைவில் திருப்பணி விசேஷங்களாலும் மற்றும் கைங்கர்ய ஸாம்ராஜ்யங்களாலும் முன்னேற்றமடைந்துள்ளது. இத்தலத்தில் மணவாளமாமுனிகள் ஆளவந்தாராக ஸேவை ஸாதித்தருள்

வது குறிப்பிடத்தக்கது *எவ்வுள் கிடந்தானென்று திருமங்கையாழ்வார் பாடலாகையாலே திருவெவ்வுளூர் என்பது உரிய வழக்கு; திருவள்ளூர் என்று சிலரோ பலரோ வழங்கினாலும் அது திருவுள்ளூர் என்பதன் விகாரமாகும். திருமழிசைப் பிரான் தமது திருவந்தாதியில், சயனத்திருக்கோலங்கொண்ட எம்பெருமான்களைச் சேர்த்து அநுபவிக்கத் திருவுள்ளம்பற்றி *நாகத்தணைக்குடந்தை வெஃகாத் திரு வெவ்வுள், நாகத்தணையரங்கம் பேர் அன்பில்* என்கிற பாசுரம் பாடியருளினர். அவ்வாழ்வார் பெரும்பாலும் போதுபோக்கினது திருக்குடந்தையிலும் கச்சித் திரு வெஃகாவிலுமாதலால் அவ்விரு திருப்பதிகளை முந்துறமுன்னம் பாடியருளினர். அடுத்தபடியாக இத்தலத்தைப் பேசினர். இந்த ஸன்னிதியில் கைங்கர்ய துரந்தரர்களாகக் காட்சிதரும் ஸ்வாமிகளில் சிலர் வேதாதிகாரிகள், சிலர் சாஸ்த்ராதிகாரிகள்...இங்ஙனேயாக விளங்கிவருவது மகிழ்ச்சி தருவதாம். எம்பெருமானுடைய திருநாமம் ஸ்ரீ வீரராகவன். திருப்புட்குழியில் விஜயராகவன், இங்கு வீரராகவன். கண்கொள்ளாக் காட்சியாக ஸேவை ஸாதிக்கும் ஸன்னிதிகளையெல்லாம் உள்ளே ஸேவித்துவிட்டுத் திருநின்றவூர் செல்வோம்.

## திருநின்றவூர்

(கேசவன்) பத்தராவியென்றும் பக்தவத்ஸலனென்றும் திருநாமம் பூண்ட எம்பெருமான் ஸேவை தந்தருளு மிவ்விடத்தை ஸாமானியர்கள் தின்னனூர் என வழங்கிவந்தாலும் திருநின்றவூரென்பதாமிது. ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரிய ஜீயர்ஸ்வாமிக்கு ஆதீனமானது இத் திருப்பதி. ஏகாந்தவாஸத்திற்கு உரிய தலமிது. இத் திருப்பதியைப்பற்றி விநோதமாகச் சொல்லுவதொன்றுண்டு; திருமங்கையாழ்வார் திருப்பதி யாத்திரையாக இங்கு எழுந்தருளினபோது இத் தலத் தெம்பெருமான் *என்னைப்பெற்ற தாயாரென்கிற தேவியாரோடு அநுபவ ரஸிகரா யிருந்து ஆழ்வாரைக் கணிசியாமையாலே ஆழ்வார் பாசுரம் பாடாமலே யெழுந்தருளிவிட்டாராம். பிறகு செய்தி தெரிந்துகொண்ட பெருமாள் தேவியாரால் தூண்டப்பட்டுப் பாசுரம் பெறுவதற்காக ஆழ்வாரைத் தேடிக்கொண்டு செல்ல, அப்போது ஆழ்வார் திருக்கடன்மல்லைத் தலசயனத்துறைவாரை யநுபவித்துக்கொண்டிருக்க, பத்தராவிப் பெருமாள் ஆழ்வாரருகே வந்து நின்று 'ஏமாற்றமடைந்துவிட்டேன், பாடல்பெற வந்திருக்கிறேன்' என்று கூற, திருக்கடன்மல்லைப் பதிகத்தில் இரண்டாம் பாட்டில் *நின்றவூர் நின்றநித்திலத்தொத்தினைக்........... கண்டது நான் கடன்மல்லைத் தலசயனத்தே* என்று ஸாதிக்க, அப்பாசுரத்தைப் பெற்றுக்கொண்டு திருநின்றவூர் வந்துசேர்ந்து தேவியாரிடம் இதைக்கூற, "நாதா! ஒவ்வொரு திருப்பதிக்கும் பெரிய யெரிய பதிகங்கள் பாடி யருளாநின்ற அவ்வாழ்வாரிடம் துணுக்கைப் பாசுரமா பெற்றுவருவது; மறுபடியும் ஓடிச்சென்று ஒரு பதிகம்பெற்று வாரும்" என்று சொல்லிப் போகவிட, பத்தராவிப்பெருமாள் ஆழ்வார் சென்றவிடமெல்லாம் தேடிச்சென்று சோழநாட்டில் திருக்கண்ணமங்கையிலே அவரைக்கண்டு அணுகித் தேவியாருடைய கோரிக்கையைக் கூற, ஆழ்வார் திருக்கண்ணமங்கைப் பதிகத்தின் ஐந்தாவது பாசுரத்தில் *குருமாமணிக்குன்றினை நின்றவூர்நின்ற நித்திலத் தொத்தினைக்...கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே* என்று

பாடி, போய்வாருமென்று விடைகொடுத்துவிட்டாராம். இவ்வளவே நமக்கு ப்ராப்தமென்று குறையோடே மீண்டாராம் பக்தராவிப்பெருமாள். ...கேசவனும் மாதவனும் உள்ளே ஸன்னிதிகளெல்லாம் ஸேவித்து விட்டுத் திருநீர்மலைக்குப் பயணமாயினர்.

## திருநீர்மலை

(கேசவன்) மாதவா! இது வொரு அற்புதமான திவ்யதேசம். ஸன்னிதி வாசலில் பெரிய புஷ்கரிணியில் இறங்கி யேறுவதும், திருமலைமேல் ஏறி யிறங்குவதும் தொண்டர்களுக்கு ஒரு நற்போது போக்காயிருக்கும். இத்தலத்தைப் பாடின திருமங்கையாழ்வார் பதிகத்தின் முதற் பாசுரத்தில் *இரும்பொழில் சூழ்நன்றுய புனல் நறையூர் திருவாலி குடந்தை தடந்திகழ் கோவல்நகர், நின்றுனிருந்தான் கிடந்தான் நடந்தாற்கிடம் மாமலையாவது நீர்மலையே* என்றருளிச்செய்தார். திருநறையூரில் நிற்பவனும், திருவாலி திருநகரியில் வீற்றிருப்பவனும், திருக்குடந்தையில் சயனித்திருப்பவனும், திருக்கோவலூரில் *உலகளப்பானடி நிமிர்த்து நடப்பவனுமான எம்பெருமானை இத் திருநீர்மலையிலே ஸேவிக்கப்பெற்றேனென்னுந் திருவுள்ளத்தால் இங்ஙனே யருளிச்செய்தபடி. பின்புள்ள பக்தசிகாமணிகள் மேற்சொன்ன நால்வகைத் திருக்கோலங்களையும் தொண்டர்கள் இத்தலத்திலேயே ஸேவிக்கவேணுமென்று கருதி இங்கேயே நின்றிருந்து கிடந்து நடந்த நான்கு திருமூர்த்திகளை ஏறியருளப்பண்ணினார்கள். திருமலை மேலும் கீழிலும் நன்றுகஸேவித்து விட்டுத் திருக்கடல்மல்லை செல்வோம். ... ... ... *

## திருக்கடன்மல்லை

(கேசவன்) கடற்கரையிலே ஸேவை ஸாதிக்கின்ற தலசயனத்துறைவாரென்னும் தலசாயி யெம்பெருமான் திருமங்கையாழ்வாரிடத்தில் இரண்டு பதிகங்கள்பெற்றுர். இரண்டும் பரமபோக்யமானவை. * நண்ணுதவாளவுணரென்று தொடங்குகிற இரண்டாவது பதிகம் நம்மாழ்வாருடைய * பயிலுஞ் சுடரொளி *நெடுமாற்கடிமைப் பதிகங்கள் போலே பாகவத சேஷத்வமென்னும் மிகச் சிறந்த பொருளை வெளியிடுவதாம். பூதத்தாழ்வாருடைய திருவவதாரஸ்தல மிதுவே. இத்தலத்தை மஹாபலிபுரம் என்று சாமானியர்கள் வழங்குவர். இங்கே சுற்றிலும் சிற்ப விசேஷங்கள் மிக அற்புதமானவை. த்வீபாந்தரஸ்தர்களும் நாடோறும் வந்து காண்பதாகும். இங்கு ஞானப்பிரான் ஸன்னிதியையும் சிறிது தூரத்தில் சென்று ஸேவித்துவிட்டுத் திருவிடவெந்தை செல்வோம். ... ... *

## திருவிடவெந்தை

(கேசவன்) இத்தலத்தெம்பெருமானைத் திருமங்கை யாழ்வார் ஸேவிக்கும் போது பெருமானுடைய வடிவழகி லீடுபட்டு உருமாறிவிட்டார் பாவம்! ஆண்மையை யிழந்து பெண்மை யெய்தித் திருத்தாயார் பேச்சாலேபேசி யநுபவிக்கிருர்.

(மாதவன்.) ஆண்களாய்த் திருவவதரித்த ஆழ்வார்கள் பெண்மை யெய்திப் பேசுவதென்பது நம்மாழ்வாரிடத்திலும் திருமங்கையாழ்வாரிடத்திலுமே

யன்றோ அதிகமாகக் காண்கிறது. நம்மாழ்வார் பெண்மையெய்திப் பேசத் தொடங்கியது திருவிருத்தத்திலேயே. திருமங்கையாழ்வார் அங்ஙனம் பேசத் தொடங்கி இந்தத் திருவிடவெந்தைப் பதிகத்திலே. இங்ஙனம் பெண்மையை எய்துவதற்கு உரிய காரணத்தைப்பற்றிக் கேசவா! இங்குச் சிறியதோருபந்யாஸம்நிகழ்த்தலாமே.

(கேசவன்.) அப்படியேயாகிறது. இதோ உபந்யஸிக்கிறேன் என்ன ச்ரோதாக்களும் கூடிவிட்டார்கள். (உபந்யாஸம்.)

எம்பெருமானை அநுபவித்தல் பலவகைப்பட்டிருக்கும்; அவனுடைய திருநாமங்களைச் சொல்லியநுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லி யநுபவித்தல், வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவனுகந்தருளின திவ்யதேசங்களின் வளங்களைப்பேசியநுபவித்தல், அங்கே அபிமானமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப் பேசியநுபவித்தல்,—என்றிப்படிப் பலவகைப்பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகைகளில் பரம விலக்ஷணமான மற்றொரு வகையுமுண்டு; அதாவது—ஆழ்வார் தாமான தன்மையைவிட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசியநுபவித்தல். இப்படி அநுபவிக்குந்திறத்தில், தாய்பாசுரம், தோழி பாசுரம், மகள் பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு.

ஆழ்வார் தாமான தன்மையை விட்டிட்டு ஸ்த்ரீபாவனையை ஏறிட்டுக் கொள்ளுதல் எதுக்காகவென்னில்; ஆழ்வார் தாமாக ஏறிட்டுக்கொள்ளுகிறாரல்லர்; அந்த அவஸ்தைதானே பரவசமாக வந்துசேருகின்றது. புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன் உலகமடங்க பெண்தன்மையதா யிருக்கையாலும், ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்திரிய நாற்றமேயின்றிப் பாரதந்திரியமே வடிவாயிருக்கையாலும் இவ்வகைகளுக்கேற்ப ஸ்த்ரீபாவனை வந்தேறி யன்று என்றே கொள்ளலாம். தண்டகாரண்ய வாஸிகளான முனிவர்கள் ராமபிரானது ஸௌந்தர்யத்திலீடுபட்டுப் பெண்மை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர் மங்கையாய்க் கண்ணனைக் கூடினர் என்றொருஐதிஹ்யமுண்டு. ஆழ்வார்கள் அப்படியன்றியே அப்போதே பெண்மையையடைந்து புருஷோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர்.

ச்ருங்காரரஸத்தின் ஸம்பந்தம் சிறிதுமின்றியே கேவலம் சுத்தபக்திரஸமாகவே பாசுரங்கள் அருளிச்செய்யக் கூடுமாயினும், ஆழ்வார்கள் ச்ருங்கார ரஸத்தையும் கலந்து பாசுரங்கள் பேசுவதற்குக் காரணம் யாதென்னில்; ஆரோக்கியத்திற்குக் காரணமாகிய வேப்பிலையுருண்டையை உட்கொள்ள இருய்க்குமவர்களுக்கு வெல்லத்தை வெளியிற் பூசிக்கொடுத்துத் தின்பிப்பதுபோலச் சிற்றின்பம் கூறும் வகையாற் பேரின்பத்தைக்காட்டி நாட்டுகின்றனரென்ப.

பெற்று வளர்த்து, பெண்பிள்ளை யௌவன பருவத்தில் நாயகனிடத்துள்ள அன்புமிகுதியால் அவனிருப்பிடத்துக்குச் செல்லவேணுமென்று பதறுமளவில் படிகடந்து புறப்படுகை குலமரியாதைக்குப் பொருந்தாதென்று தடுப்பவள் உலகில் தாய் எனப்படுவள்; ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றினவர்கள் பேற்றை விளம்பித்துப் பெறுதலில் காரணமில்லாமையாலே அதனை விரைவில் பெறவேணுமென்கிற ஆவலைப் பிறப்பித்து அதனால் படிகடந்து நடக்கவேண்டி வந்தவளவில் இது ப்ரபந்நர் குடிக்கட்டுப்பாட்டுக்குச் சேராதென்று விலக்கி 'எம்பெருமான் தானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்கவேணும்' என்றுசொல்லித் துடிப்பை அடக்

கப்பார்க்கிற நம:பதத்திற் கூறப்பட்ட உபாய அத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தாய் என்பதாகக்கொள்ளவேண்டும்.

வேதாந்தவாசிரியர் "பாஞ்சாலீகாத்ர சோபாஹ்ருதஹ்ருதய வதூவர்க்க பும்பாவ நீத்யா பத்யௌ பத்மாஸஹாயே ப்ரணயிநி பஜத: ப்ரேயஸீபாரதந்த்ர்யம், பக்தி: ச்ருங்காரவ்ருத்த்யா பரிணமதி முநேர்பாவபந்தப்ரதிம்நா யோகாத் ப்ராகுக்த பாவஸ்திதிரிஹ விரஹோ தேசிகாஸ் தத்ர தூதா:." என்று த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியிலும், "போத்தும் தவ ப்ரியதமம் பவதீய கோதே பக்திம் நிஜாம் ப்ரணயபாவநயா க்ருணந்த:, உச்சாவசைர் விரஹஸங்கமஜை ருதந்தை: ச்ருங்காரயந்தி ஹ்ருதயம் குரவஸ் த்வதீயா:."என்று கோதாஸ்துதியிலுமருளிச் செய்தவை இங்கு ஸ்மரிக்கத்தக்கன கேண்மின்.

மாதவா! ஒரு விசேஷஞ் சொல்லுகிறேன் கேள். நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் தாய்ப்பாசுரமாகப் பல பதிகங்கள் பாடியுள்ளார். (2-4.) * ஆடியாடியில் தொடங்கி (7-2) *கங்குலும் பகலில் தாய்ப்பேச்சைத் தலைக்கட்டினர். தலைக்கட்டின அப்பதிகத்தில் எவ்விதமான விசேஷார்த்தம் அமைக்கப்பட்டதோ, அவ்வர்த்த விசேஷத்தைத் திருமங்கையாழ்வார் தமது தாய்ப்பேச்சின் தொடக்கமான இத் தலத்துப் பதிகத்திலே அமைத்தார். *கங்குலும் பகலில் *செங்கயல்பாய்நீர்த் திருவரங்கத்தாய்! இவள் திறத்தென் செய்கின்றாயே! ...இவள் திறத்து என் செய்திட்டாயே? ...என் சிந்தித்தாயே...☼ என்று அரங்கனை வினவினபடி சொல்லிற்று இங்கு அவ்விஷயமே ☼உன்மனத்தாலென்னினைந் திருந்தாய் இடவெந்தையெந்தை பிரானே!☼ என்று ஒருகால் சொன்னப்போலே ஒன்பதிற்கால் சொல்லி, மிகச் சிறந்ததொரு ஸத்ஸம்ப்ரதாயார்த்தத்தை வெளியிட்டாராயிற்று. ஸ்ரீவசனபூஷணத்தில் "உன் மனத்தால் என்னினைந்திருந்தாயென்கிறபடியே பராப்திக்கு உபாயம் அவன் நினைவு. அதுதான எப்போதுமுண்டு; அதுபலிப்பது இவன்னினைவுமாறினால்." என்றருளிச்செய்த சூர்ணைகள் வடிக்கட்டின சாஸ்த்ரார்த்தமாகும். இதைச்சிறிது உபந்யஸித்துவிட்டு மேலே திருக்கடிகை ஸேவிக்கப்புறப்பட்டாயிற்று. ...

## திருக்கடிகை (சோளஸிம்ஹபுரம்)

(தேசிகன்) மாதவா! இங்கு ஒரு விசேஷம் சொல்லுகிறேன் கேள். *தானுகந்தவூரெல்லாம் தன்தாள் பாடி* யென்று சொல்லித் திவ்யதேசங்களை யெல்லாம் தொழுதுபாடியருளாநின்ற திருமங்கையாழ்வார், திருவல்லிக்கேணி, அட்டபுயகரம், பரமேச்சுரவிண்ணகரம், திருநறையூர் என்கிற திருப்பதிகளைப்பாடுகையில் ஆங்காங்குத் திருப்பணிகள் செய்த ☼தென்னன் தொண்டையர் கோனையும் வயிரமேகனையும் மல்லைபர்கோன் பல்லவனையும் செம்பியன்கோச் செங்கணானையும் பாடியருளினர். அவ்வாழ்வார் இங்கேயெழுந்தருளியிருந்தாராகில் இத்தலத்தில் சிந்தைக்கும் கோசரமல்லாத எண்ணிறந்த திருப்பணிகளைச் சிறப்புறச் செய்துவரும் ஒரு மஹாபுருஷரையும் தவறாது பாடியிருப்பார். ☼நம்பிள்ளையின் திருநாமம்பூண்ட பரமபாகவதோத்தமரேயவர். ☼அநுப்ரவிச்ய குருதே☼ என்கிற கணக்கிலே அக்காரக்கனியெம்பெருமான் இந்த மஹாபுருஷரையநுப்ரவேசித்துச் செய்துவரும் திருப்பணிகள் திருவரங்கந்திருப்பணிகள் போலப் போற்றத்தக்கவை. மலை மேலும் கீழும் எம்பெருமானை ஸேவித்துவிட்டுச் சென்னை மாநகரகத்தே சென்று சேர்ந்து அங்கிருந்து தெற்கே புறப்பட நிச்சயித்தாயிற்று. (வழியிடையில் மதுராந்தகம்.)

(தொடரும்)

# ஸ்ரீமதுபயவே. G. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, அட்வகேட்

## (செங்கற்பட்டு)

ஜகத் ப்ரஸித்தராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஸ்வாமிக்கு 10—11—74ல் பத்நீவியோக வ்யஸனம் ஏற்பட்டதை அநுதாபத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். ஸ்வாமிக்கு ஏழு திருக்குமாரர்கள். எல்லாரும் உயர்ந்த பதவியில் வாழ்பவர்கள். அவர்கள் திருத்தாயாரின் சரமகைங்கரியத்தை மிருந்த பக்தி ச்ரத்தையோடு நடத்தினது பாராட்டத்தக்கது. ‘‘கர்மலோபே த்ரவ்யலோபே ஸத்யபி’’ என்று புரோஹிதர்கள் பாடம் செய்துவைத்திருப்பதை எங்கும் ஏகரீதியாகச் சொல்லிவருவர்கள். இங்கு எவ்விதலோபமுமில்லாதபடி திருவத்யயனுந்தமானக்ரியைகள் செங்கற்பட்டில் ஸ்வாமி தருமாளிகையில் நடைபெற்றது. (22—11—74) தேதியன்று திருவத்யயன கோஷ்டியின் காட்சிப் படங்கள்—





If un-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,

KANCHIPURAM. Pin Code 631503

To

Sriman / Srimathi



135 Sri M. K. Rangaramanujam,
29, Mosque Street,
Saidapet, Madras-15.

**Edited and Published by P. B. Annangaracharya Swami for Madras Sathgrantha Prakasana Sabha.**

**Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press, Sannidhi Street, Kancheepuram-631503.**